திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு

உ

செந்திலாண்டவன் துணை

ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர்

அருளிச்செய்த

# முதுமொழிமேல் வைப்பு

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள்

9-ஆம் ஆண்டு நினைவு மலர்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்துத் தலைவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

அவர்கள் திருவுளப்பாங்கின்படி

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் குமாரர்

எஸ். கலியாணசுந்தரையர் அவர்கள்

குறிப்புரையுடன்

ஸ்ரீ காசிமடம் ஜூனியர்

ஸ்ரீமத் வித்துவான் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது

17—3—1953

 [நந்தன, பங்குனி

உ

செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

— o —

" அகர வுயிர்போல் அறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து "

—திருவருட்பயன்

உலகில் இன்றுவரை எழுந்த நீதி நூல்கள் பல. அவற்றுள் தலைசிறந்ததும் யாவர்க்கும் ஒப்ப முடிந்ததும் ஆகிய நூல் முதுமொழி எனப்படும் திருக்குறளேயாம். நீதிகளை விளக்கும் வரலாறு முன்னும், அதற்கியைந்த குறளைப் பின்னும் அமைத்து இயற்றிய நூல்கள் பல. அவற்றுள், முதுமொழிமேல் வைப்பு என்ற நூலும் ஒன்று. இது வெண்பாவாலாகியது.

இந்நூலுள் அறம் பொருள் இன்பங்களை விளக்கும் நீதிகட்குத் திருக்குறளும், வீட்டின் பகுதியை விளக்க உமாபதிசிவாசாரியார் அருளிய சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாகிய திருவருட் பயனும் அமைக்கப்பெற்றுள்ளன. இந்நூலில் விளக்கப்பெறும் செய்திகள் பெரும்பாலும் சிவசம்பந்தமாகவே உள்ளன. அப்பகுதிகளும் இனிமையும் எளிமையும் உடையன. இந்நூலாசிரியர் ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர். இவர் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளின் தலை சிறந்த மாணவர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் அவர்களின் 9-வது ஆண்டு நினைவு மலராக இப்பதிப்பு வெளியாகிறது. இதன் முதற் பதிப்பு 1945-லும், 2வது பதிப்பு 1949-லும் இந்நினைவு நாட்களிலேயே வெளிவந்தமை குறிப்பிடற்பாற்று.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இந்நூலை வெளியிடும் பணியை அடியேற்கு அளித்தார்கள். இப்பெருங்கருணைத் திறத்தினைப் போற்றித் துதித்து அவர்களின் பொன்னார் திருவடி மலர்களை வந்தித்து வழிபடுகின்றேன்.

இந்நூல் அச்சு ஆகுங்கால் அச்சுப் பிரதிகளை ஒப்பு நோக்குதல் முதலிய பணிகளைச் செவ்வனே ஆற்றிய திருச்சி வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்களுக்கும் பனசைச் செந்தமிழ்க் கல்லூரி பிரின்சிபால் திரு. கே. எம். வேங்கடராமையா M.A., B.O.L. அவர்கட்கும் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
17—3—1953

இங்ஙனம்
மகாலிங்கத் தம்பிரான்
இளவரசு

## இரண்டாம் பதிப்பின்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

சூழ்தரு வல்வினையும் உடல் தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே

—தேவாரம்

பழைய காலமுதல் தமிழ் நாட்டில் எழுந்த இலக்கிய நூல்களுள்ளே பலவகையாலும் உலகினர் போற்றும் உயர்தனிச் சிறப்பு வாய்ந்தது திருக்குறளாகும். இது தமிழ் நூலாசிரியர்கள் யாவராலும் சமய வேறுபாடின்றிப் பாராட்டப் பெறுவது. இந் நூலையும் இதன் கருத்துக்களையும் சொல்லமைதியையும் பெரும்பாலும் எல்லாத் தமிழ் நூல்களிலும் காணலாம். இந் நூலையும் நூற்பகுதிகளையும் பிறமொழிகளில் பலவாறு மொழிபெயர்த்திருக்கிறார்கள். சிறந்த நீதி நூலாகிய இக்குறளைச் சார்ந்து பிற்காலத்தில் பலவகையான நூல்கள் தமிழில் உண்டாயின. குறட்பாக்களைச் செய்யுட்களின் இடையிலும் இறுதியிலும் அமைத்துச் சில நூல்கள் இயற்றப் பெற்றுள்ளன.

திருக்குறட் பாக்களுக்கு உதாரணமோ விளக்கமோ கூறி அதனோடு குறளையும் கொண்டு அமைந்த செய்யுட்களையுடைய நூல்கள் பல. அவற்றுள் முதுமொழிமேல் வைப்பு ஒன்றாகும். இங்ஙனம் அமைந்த நூல்கள் இதற்கு முன்னும் உண்டு; பின்னும் உண்டு. இப்போது தெரிந்தவை வருமாறு :

சினேந்திர வெண்பா, இரங்கேச வெண்பா, தினகர வெண்பா, சிவசிவ வெண்பா, வடமலை வெண்பா, திருமலை வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா, திருக்குறட் குமரேச வெண்பா, திருப்புல்லாணி மாலை, திருத்தொண்டர் மாலை, வள்ளுவர் நேரிசை என்பனவாம்.

முதுமொழி என்ற தொடர் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரியற்றிய திருக்குறளைக் குறிக்கும். சோமேசர் முதுமொழி வெண்பா என்ற தொடரையும். "முத்தமிழ்ச் சங்கத்தவரை *மூதுரையால் வள்ளுவரும், சித்தமகிழ் வித்தார் சிவசிவா" (சிவ சிவ வெண்பா, 73) என்ற அடிகளையும் நோக்குக. முதுமொழியாகிய திருக்குறளின் மேல் உதாரணங்களும் விளக்கங்களும் அமைத்துக் கூறப்பெற்றமையின் இந்நூல் முதுமொழி மேல் வைப்பு என்னும் பெயருடையதாயிற்று. காரணங்கருதிய வழி இப்பெயர் அக்காரணத்தையுடைய பல நூல்களுக்கும் செல்வதாகவும், காரணங்கருதாத வழி இடுகுறி அளவாகநின்று இந்நூல் ஒன்றையே குறிப்பதாகவும் இருத்தலினால் காரண இடுகுறிப் பெயராயிற்று.

சோமேசர் முதுமொழி வெண்பா திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ சிவஞான முனிவராலும், முருகேசர் முதுநெறி வெண்பா பொம்மபுரம் ஸ்ரீ சிவஞான பாலைய தேசிகராதீனத்து சிதம்பரம் ஈசானிய மடம் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளாலும் இயற்றப்பெற்றவை.

முதுமொழிமேல் வைப்பின் ஆசிரியர் தருமபுரம் ஆதீனத்தைச் சார்ந்த கமலை ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவராவர். இந்நூலின் சிறப்புப் பாயிரத்தாலும் என் தந்தையாரவர்கள் எழுதிவைத்துள்ள நூல்களின் வரலாற்றுக் குறிப்பினாலும் இது தெரிகின்றது. சிறப்புப் பாயிரத்தில் உள்ள 'கமலை வெள்ளியம் பலவாண முனிவன்' என்ற தொடர்மொழியால் இவர் திருவாரூரிற் பிறந்தவர் என்று சொல்லலாம். சிவசம்பந்தமான செய்திகளும் கதைகளுமே குறட்பாக்களுக்கு விளக்கமாக அமைந்திருப்பது இந்நூலின் ஒரு தனிச் சிறப்பாகும். இதுபோன்ற வேறு நூல்களில் காணப்படாத வீட்டின்பால் இந்நூலிலே கூறப்பெற்றுள்ளது மற்றொரு சிறப்பாகும். அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்றுக்கும் திருவள்ளுவர் இயற்றிய திருவள்ளுவப் பயனாகிய திருக்குறட் பாக்களையும் வீட்டின்பால் என்ற பகுதிக்குக் கொற்றவன்குடி உமாபதி

* மூதுரை - முதுமொழி

B

சிவாசாரியர் அருளிச் செய்த சித்தாந்த சாத்திரமாகிய திருவருட்பயனிலுள்ள குறள் வெண்பாக்களையும் இது மேற்கோளாகவுடையது. திருவள்ளுவப் பயனாகிய திருக்குறளுக்கும் இந்தத் திருவருட் பயனுக்கு முள்ள ஒருமைப்பாட்டை இந்நூல் வீட்டின்பாலின் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ள செய்தியால் அறியலாகும். இந்நூலிலுள்ள செய்யுட்களின் தொகை காப்பு நீங்கலாக 196. அவற்றுள் அறத்துப்பால்-63; பொருட்பால்-96; காமத்துப்பால்-27; வீட்டின்பால்-10. முதல் மூன்றுபால்களில் ஒவ்வோர் அதிகாரத்துக்கும் ஒவ்வொரு செய்யுள் என்ற நியதியை இந் நூலாசிரியர் மேற்கொள்ளவில்லை. சில அதிகாரங்களுக்கு இரண்டு மூன்று நான்கு செய்யுட்களும் ஒரே குறளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட உதாரணங்களும் இந் நூலில் உள்ளன.

இந்நூற் செய்யுட்களில் பெரும்பாலன நேரிசை வெண்பாக்கள்; மற்றவை இன்னிசை வெண்பாக்கள்.

இந்நூலாசிரியராகிய வெள்ளியம்பலவாண முனிவர் *தருமபுர ஆதீனத்தின் நான்காவது குருமூர்த்தியான ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடத்தில் சந்நியாசம் பெற்றவர். படிக்காசு வைத்த முனிவருடன் காசியாத்திரையாகச் சென்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளிடம் வடமொழி தென்மொழி இரண்டிலும் பயின்று வல்லவரானார். ஐந்தாவது பட்டத்து ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக சுவாமிகளிடத்தில் ஞானதீக்கை பெற்று அவர்கள் திருமுன் ஞான சாஸ்திரங்களையும் பண்டார சாஸ்திரங்களையும் நன்கு கற்றுத் தெளிந்தார்.

இவர் தக்ஷிண யாத்திரைசெய்த காலத்தில் திருச்செந்தூரில் குதர்க்கவாதம் செய்து தூஷித்த ஒரு புலவரைத் தாம் செய்த சபதப்படியே தம் மாணாக்கராகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளைக்கொண்டு திருச்செந்தூர் நிரோட்ட யமக வந்தாதி பாடித் தோற்கச் செய்து அடிமையாக ஏற்றனர். திருநெல்வேலிச் சிந்துபூந்துறைத் திருமடத்தில் பல மாணவர்களுக்குப் போதகாசிரியராக வீற்றிருந்தார்.

---

* தருமபுரத்திலிருந்து வெளிவந்த பத்தாண்டு மலரிலிருந்தபடி இவ்வாசிரியர் வரலாறு எழுதப்பெற்றது.

இவர் தலயாத்திரை செய்யுங்கால் ஆங்காங்குள்ள அன்பர்கள் வேண்டுகோட்படி, பல புராணப் பிரசங்கங்கள் செய்தும் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தனர்.

பின்னர் ஸ்ரீ குருஞான சம்பந்த தேசிகர் சமூகமாலை, தாலாட்டு, திருப்பள்ளியெழுச்சி முதலிய பிரபந்தங்களை அருளிச் செய்தனர். ஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக மூர்த்திகள் அருளிச் செய்த முத்தி நிச்சயம் என்னும் பண்டார சாஸ்திரத்துக்கு ஒரு பேருரையும் ஒரு சிற்றுரையும் அருளிச் செய்துள்ளார். சிவ ஞான சித்தியாருக்கு ஞானவரண விளக்கம் என்னும் பாஷியமும் இயற்றியுள்ளார். இவர்கள் பரிபூரணம் எய்திய இடம் தில்லையம்பதியாகும். அங்கு இவர்கள் சமாதி ஞானப்பிரகாச குளத்துத் தென்மேற்கு மூலையில் இருக்கிறது.

கந்தபுராணச் சுருக்க ஆசிரியராகிய சம்பந்த சரணலய சுவாமிகள் இவரிடம் கல்விகற்றவர்களாவர். தாம் சொந்தமாகப் பாடிய கவிகளை வேறு நூல்களிற் சேர்த்து இவர்தம் கவித் திறத்தைப் புலப்படுத்தியுள்ளனர். தேவாரத்திலும், பெரிய புராணம் முதலிய நூல்களிலும் இவருடைய பாடல்கள் கலந்துள்ளனவென்று பெரியோர் கூறுவர். வெள்ளி பாடல் என்று தமிழ் உலகத்தில் வழங்குவது இவருடைய பாடலே.

சிவபரமான புராணங்களிலும், சைவ சாஸ்திரங்களிலும் இவருக்கிருந்த பேராற்றல் முதுமொழிமேல் வைப்பில் இவர் காட்டிய உதாரணங்களால் நன்கு புலனாகும். இவர் போதகாசிரியராக இருந்த காலத்தே சிவ கதைகளை மாணவர்களுக்குக் கற்பிக்கவேண்டி இந்நூலை எளிய நடையில் இயற்றியிருத்தல் வேண்டுமென்றோ, மிகச் சிறுபிராயத்தில் பாடியிருத்தல்வேண்டுமென்றோ தோற்றுகிறது. இந்நூலிலுள்ள இவருடைய கருத்துக்கள் பல, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் தம் பிரபந்தங்களில் எடுத்தாளப்பெற்றுள்ளன (கவிகள் 15, 18, 120 முதலியன).

திருவள்ளுவ நாயனார் சுத்தசைவர் என்பதற்கு ஆதாரமாகக் காணப்படும் திருக்குறட்பாக்களை இவ்வாசிரியர் இந்நூலுள் எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது போற்றத்தக்கது.

'திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் மதுரையில் சமணரைக் கழுவேற்றவில்லை; அவர்கள் தாமாகவே ஏறினர்' (செய்யுள், 35, 100) என்று கூறும் முகத்தால் சைவ சமயத்தின்பாலுள்ள அருட்டன்மையை இவர் புலப்படுத்தியிருக்கிறார். தக்கயாகப் பரணியாலும் இது விளங்கும். இவரது 'சமயக் கொள்கை, 'முத்தி நிச்சயத்துக்கு' இவர் எழுதிய சிற்றுரையின் பகுதியால் விளங்கும். அது வருமாறு :—

'ஆன்மாக்கள் சோபான முறையிற் சைவ சமயத்தைத் தலைப்பட்டு, சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்தல் ஆகிய சித்தாந்த முத்தியடைதற் பொருட்டுப் புறச் சமயங்களெல்லாம் சிவபிரானால் தூல சூக்கும முறையின் வைத்து முதனூலுட் கூறியருளப் பட்டமையின் அவற்றையும் பயன் கருதி ஆங்காங்கு உளவாக விடுத்து, அவற்றால் குன்றிய சைவசமயத்தை யாவரும் முடிந்த பெரும்பேறடைவான் கருதி விளக்கஞ் செய்தா ரென்பார் பிறர் சமயம் நந்தாது தோற்றுவித்த நற்குரவனென்றார்.'

'நந்தாது தோற்றுவித்தல் - புறச் சமயங்கள் துவரக் கெட்டொழியாமல் அவையும் உளவாகச் சைவ சமயத்தை வெளிப் படுத்தல்.'

'வளவர் கோன் பாவையும்' மந்திரி குலச்சிறையாரும் அருக சமயத்தை நிராகரித்துச் சைவ சமயத்தை ஸ்தாபிக்குமாறு வேண்டிய காலத்துப் பிள்ளையார் அதற்கு உடன்பாடு உடன் கூறி, ஆலவா யழனிறக் கடவுள் சந்திப்புக்கு 'வேத வேள்வியை நிந்தனை செய்துழ - லாத மில்லி யமணொடு தேரரை - வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே' என விஞவிடை பெற்றுச்சென்று வெற்றிகொண்டமையும் மதங்கள் சிவபிரானாற் சோபான முறையாக உண்டாக்கப்பட்டமையை நன்கு உணர்த்தும்.'

உரையாற்றல் தோன்ற எழுதுபவர் இவர் என்பது கீழ்வரும் பகுதிகளால் விளங்கும் :—

'இல்லறமல்லது நல்லறமன்று என்பது : இல்லறம் - இல்லறமும், அல்லது - அதுவல்லாததாகிய துறவறமும், நல்லறம் -

(அஃதஃதை யனுட்டிக்கும் அறிவாற்றலுடையார்க்கு) நன்மை பயக்கும் அறங்களாம், அன்று - தீமை பயக்கும் அறங்களல்ல எனப் பொருள்தரலின் மேலதனோடு இது முரணுமை யுணர்க. பான் மயக்க முருமைப் பொருட்டு அன்று என்பதனை இல்லறத் தோடுங் கூட்டித் தனித்தனி முடிவுசெய்துகொள்க.'

'சிற்றின்பம் - உலக இன்பம்; அது சிறிது போழ்தினுள் நிலவுதலன்றி அழிந்து போதரலின் அப்பெயர்த்தாயிற்று. இக் கருத்துப் பற்றியே அரதன வாக்கிய அடிகளும்' தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன்' என்று சிலேடையாகத் திருவாசகத் துள் ஓதியருளியது மென்றுணர்க.'

சைவ நூல்களில் விசேஷமான பற்றுடைய இவர் சிவராச தானியாக விளங்கும் சிதம்பர ஸ்தலத்தில் மிக்க ஈடுபாடுடைய வர் (196). சிதம்பரம் ஆலயத்திலுள்ள பொதுச் சபை இவரால் கட்டப்பெற்றதென்று சொல்லுவார்கள்.

என் தந்தையாரவர்கள் பதிப்பிக்கத் தொகுத்துவைத்திருந்த நூல்களுள் முதுமொழிமேல் வைப்பு ஒன்றுகும். இதன் ஏட்டுப் பிரதி யொன்றும் அதன்படியாகிய கடிதப் பிரதி யொன்றும் அவர்கள்பால் இருந்தன. ஏட்டுப் பிரதியில் சில இடங்கள் விளக்கமாக இல்லை. பல புத்தக சாலைகளுக்கு எழுதிக் கேட்டும் வேறு பிரதி கிடைக்கவில்லை. ஏட்டுச் சுவடியின் இறுதியில், 'சிறப்புப் பாயிரமும் முதுமொழிமேல் வைப்பும் முற்றும்...... ஞான சம்பந்தன் குருபாதமே நீடூழி வாழ்க. சிவஞான சம்பந் தன்' என்ற வாக்கியங்கள் உள்ளன. இதனுல் இந்நூலை ஏட்டில் எழுதியவர் சிவஞான சம்பந்தர் என்ற பெயரை உடையவராக இருக்கலாம் என்று தெரிகிறது.

இந்நூலின் குறிப்புரை எழுதுவதற்கு ஆதாரமாக இருந்த நூல்கள் வருமாறு:—கந்தபுராணம், கம்பராமாயணம், காஞ்சிப் புராணம், சிவஞான சித்தியார், சிவஞான போதம், சிவப்பிர காசம், சிவபோக சாரம், சீகாழித்தலபுராணம், சீவகசிந்தாமணி, தக்கயாகப்பரணி, தண்டியலங்காரம், திருக்கழுக் குன்றக் கோவை, திருவாசகம், திருவாப்பனூர்ப் புராணம், திருவிளையா டற் புராணம், தேவாரம், நால்வர் நான்மணி மாலை, நாற்கவி

ராச நம்பியகப் பொருள், பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை, பெரிய புராணம், மருதவனப் புராணம், முத்தி நிச்சயம், விருத்தாசல புராணம், வில்லிபாரதம்.

இதன் *முதற் பதிப்பு 1945-ஆம் ஆண்டில் வெளிவந்தது. இப்பதிப்பில் சில திருத்தங்கள் அமைந்துள்ளன.

கமலை ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்தவராகவும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தின் ஸ்தாபகருமாகிய ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகளுடைய நன்மாணுக்கராகவும் விளங்கியதற்கேற்ப இந்த இரண்டாம் பதிப்பு ஸ்ரீ ஆதி குமரகுருபரருடைய தினத்தில் வெளிவருவது மிகவும் பொருத்தமுடையதே. இப்பதிப்பு அச்சாகி வருகையில் ஒப்புநோக்கல் முதலிய உதவிகளைச் செய்த சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழாசிரியர் ஸ்ரீ வி. மு. சுப்ரமணிய ஐயர் B. O. L. அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இப்போது காசி மடத்தின் தலைவர்களாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பட்டத்துக்கு வந்தது முதல் நாளது வரையில் தமிழ்மொழி, தேவாரத் திருமுறைகள், சைவசித்தாந்தம், வைத்தியம், ஜீவகாருண்யம், கல்வி, பொதுநன்மை முதலியன சம்பந்தமாக அவ்வப்போது பல துறைகளில் எண்ணியெண்ணி ஒன்றன்பின் ஒன்றாக மனமுவந்து ஏற்படுத்தியிருக்கும் பேரறக் கட்டளைகள் 61. ** யாவரும் தெரிந்து மகிழும்படி அவர்களுடைய ஒப்புயர்வற்ற அவ்வறச் செயல் விவரங்கள் இப்புத்தகத்தை அனுபந்தமாக அலங்கரிக்கின்றன.

அவர்களுடைய திருமேனி ஆரோக்கியத்தையும், தீர்க்காயுளையும் குறித்து ஸ்ரீ செந்திலாண்டவன் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

தியாகராஜ விலாசம்
சென்னை
விரோதி—வைகாசி.

இங்ஙனம்
S. கலியாணசுந்தரையர்

---

* இதன் 2 - ஆம் பதிப்பு 1949 - ல் வெளிவந்துளது.
** இப்பொழுது 115 - அறக்கட்டளைகள்.

# உள்ளுறை



# இந்நூல் குறிப்புரைக்கு எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

—— ஃ ——

கடவுள்—கடவுள் வாழ்த்து

கந்த—கந்தபுராணம்

கம்ப—கம்பராமாயணம்

கு - ரை—குறிப்புரை

சிறப்பு—சிறப்புப்பாயிரம்

சீவக—சீவகசிந்தாமணி

சூ—சூத்திரம்

தனிப்—தனிப்பாடல்

திருவா—திருவாசகம்

திருவால—திருவாலவாயுடையார்
திருவிளையாடற் புராணம்

திருவிளை—திருவிளையாடற் புராணம்

தே—தேவாரம்

நாற் - நம்பி—நாற்கவிராச நம்பியகப்பொருள்

பி-ம்—பிரதிபேதம்

புறநா—புறநானூறு

பெரிய—பெரிய புராணம்

பெரியநா-கட்டளைக்—பெரியநாயகியம்மை
கட்டளைக் கலித்துறை

மேற்—மேற்கோள்

செந்திலாண்டவன் துணை

# முதுமொழிமேல் வைப்பு



## சிறப்புப் பாயிரம்

பதிகதையால் நாலொழிவெண் பாட்டிருநூ றாக
முதுமொழிமேல் வைப்பு மொழிந்தான்—மதுமலர்க்கா
உம்ப ருலகளவு மோங்கு கமலை வெள்ளி
அம்பல வாணமுனி வன்.

(குறிப்புரை) பதிகதையால் - சிவபெருமானுக்குரிய கதைகளால். வெண்பாட்டு - வெண்பா. நாலொழி வெண்பாட்டு இருநூறு-நான்கு குறைந்த இருநூறு, அதாவது நூற்றுத் தொண்ணூற்றாறு வெண்பாக்கள், அறத்துப்பால்: 63; பொருட்பால்: 96 ; காமத்துப்பால் : 27 ; வீட்டின்பால் : 10; ஆக மொத்தம் 196. கமலை - திருவாரூர்.

## காப்பு

சதுமுகன்மால் காணாத் தலைவர்புகழ் சொல்லும்
முதுமொழிமேல் வைப்பு மொழிய—மதுரத்
தவளமத வாரணமே தாயெனநின் றோத்தும்
கவளமத வாரணமே காப்பு.

(கு - ரை) சதுமுகன் மால் - பிரமதேவனும் திருமாலும்; உம்மைத்தொகை. தலைவர்-சிவபெருமான். தவளமத ஆரணம்-தூய்மையான வலிமை பொருந்திய வேதம். மத ஆரணம்-எல்லா மதங்களுக்கும் ஆதாரமான வேதம் எனினுமாம். வேதத்தின் ஒரு பகுதி சுக்கிலயஜுஸ் என்று வழங்கிவரும்; அத

னால் இங்கே, 'தவள மத ஆரணம்' என்றார்; இத்தொடர்வேதம் என்ற அளவாய் நின்றது. கவளம் - யானையின் உணவு. மதவாரணம் - மதம் பொருந்திய யானை; விநாயகர். 'ஆரணம் தாயென நின்றேத்தும்' என்றது பிரணவஸ்வரூபியாகிய விநாயகர் வேதங்களை ஈன்றாரென்று கொண்டு.

# 1. அறத்துப்பால்

## பாயிரம்

### கடவுள் வாழ்த்து

1 எங்கு முளனிறைவ னென்றிரண்டா யேத்துதமிழ்ச்
சிங்க நடந்தவழிச் சித்தாந்தம்—என்ற
தகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(கு - ரை) இரண்டாய் - இறைவன் தானே தனித்தும், ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவாகி ஜடத்திலும் சித்திலும் வேறின்றிக் கலந்தும் நிற்கும் நிலைகள் இரண்டாக. தமிழ்ச் சிங்கம்-சிவஞான போதத்தை யருளிச் செய்த மெய்கண்ட தேவர். 57-ஆம் செய்யுள் பார்க்க.

அகரம்தானே தனித்தும் ஏனை மெய் உயிர்களோடு வேறின்றிக் கலந்தும் நிற்றலானும், விகாரமின்றி நாதமாத்திரையாய் இயல்பாகப் பிறத்தலானும், முதற்கண் வைக்கப் படுதலானும் இறைவனுக்கு உவமையாயிற்று. இச்செய்யுள் பதியிலக்கணம் கூறிற்று. 'அகர உயிர்போல அறிவாகி யெங்கும், நிகரிலிறை நிற்கும் நிறைந்து', 'எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகம், தங்குமவன் றானே தனி', அக்கரங்கள்தோறுஞ் சென்றிடும் அகரம்போல', 'அகரவுயிரெழுத் தனைத்து மாகிவேறாய் அமர்ந்ததென' என்பவற்றையும் சிவஞான போதம், சூத்திரம் 2-இன் பொருளையும் இதனுடன் ஒப்பு நோக்குக; "அகரம் முதலி னெழுத்தாகி நின்றாய்" (தே. சுந்தரர்.) 1

2 புத்தர்பிறர் சொல்லும் பொருண் மறுத்து வள்ளுவர்தாம்
அத்தர்மறை யாகமங்க ளாமென்று—வைத்த
திருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(கு - ரை) புத்தர் பிறர் - புத்தர் முதலிய புறச்சமயத்தார்; இவர் கூறும் பொருள் உலகாயதம், பௌத்தம், சமண மென்பன. பிறர் - சைனருமாம். அத்தர் - கடவுள்.

திருவள்ளுவர் அத்தருடைய மறைகளையும் ஆகமங்களையும் ஏற்றுக்கொண்டுள்ளார் என்பதை இதிலுள்ள குறள் காட்டும் என்பது கருத்து. வைத்தது : எழுவாய்; 'இருள்சேர்...மாட்டு' என்பது பயனிலை.

'அகர முதல' என்னும் குறளால் பதியிலக்கணமும், 'வேண்டுதல் வேண்டாமை' (4) என்னும் குறளால் பசு இலக்கணமும், 'இருள்சேர் இருவினையும்' (5) என்னும் குறளால் பாச இலக்கணமும் பெறப்பட நாயனர் கடவுள் வாழ்த்தை அமைத்திருப்பதால் அவருக்கு ஆகமங்கள் உடன்பாடாமென்பர் சித்தாந்திகள். 2

3 வைதிகமேற் கொண்டுசொலு மற்றவர்க்குப் பக்குவர்க்காம்
சைவமவர் கொண்ட சமயமெனும்—செய்திசொலும்
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

(கு - ரை) வைதிகம் - வேத சம்மதமான மதங்கள்; அவை: பாஞ்சராத்ரம், வைணவம், வைகாநசம், ஜ்யோதிஷம், மாயா வாதம், வேதாந்தம், துவிதம், அத்துவிதம் என்பன. மற்றவர்க்கு வைதிகத்தை மேற்கொண்டு சொலும் என்க. மற்றவர்-பக்குவர் அல்லாதார். இதனைச் சொல்லுவது 'கோளில்...தலை' (9) என்ற குறள். இங்கே சைவம் என்றது சிவாகமத்தின் கருத்தாகி வந்த சித்தாந்தத்தை.

எண்குணத்தான் - சிவபெருமான்; எண்குணங்களாவன : தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வின னாதல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை,

முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை என்பன. 'இவ்வாறு சைவாகமங்களிற் கூறப்பட்டன' என்று பரிமேலழகரே கூறுவதால் அவர் காலத்துக்கு முன்னரே இக்கவியிற் கண்ட கருத்து வழக்கி லிருந்ததாகக் கொள்ளலாம். வேதாந்தத்திலும் சித்தாந்தம் சிறந்ததென்பது 'வேதாந்தம் உடலும் சித்தாந்தம் உயிருமாக நிற்கும்' என்ற கொள்கையாலும், 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்' (சிவப்பிரகாசம்) என்பதனாலும் புலனாகும். 3

4 பெற்றதவர் சைவத்துப் பேத சமாதியன்றி
மற்றுஞா னாந்தமென வந்ததிது—முற்றும்
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

(கு - ரை) அவர் - முன்கவியிற் கூறிய பக்குவிகள். சமாதி - யோகம். அவர் சைவத்துப்பெற்றது பேதசமாதியின்றி ஞானாந்தமென வந்ததிது. பக்குவிகள் யோக மார்க்கத்தை யன்றி ஞான முடிவைப் பெற்றவர்கள் என்றபடி வந்தது இது; இது என்றது பின்னுள்ள 'தனக்குவமை' என்னும் குறளை. இக்குறள் காமத்துப்பாலைத் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ள தென்பர் சித்தாந்திகள். பிறவிக்கேதுவாகிய காம வெகுளி மயக்கங்கள் பற்றிவரும் மனக்கவலையை நீக்கல் ஞானமார்க்கத்தவர்களுக்கே சாத்தியமாம் என்றபடி; 'சரியை கிரியை யோகம் என்னும் மூன்று செய்கைகளும் பதமுத்திகளை யளிக்க, ஞானச் செயல் ஒன்றே பரமுத்தியளித்தலின் அவற்றிலும் அது சிறந்த செயலாயிற்று' (முத்தி நிச்சயம், சிறப்புப் பாயிரம், உரை.) 4

5 அப்பர்முதற் சித்தாந் திகள்வீ டடைதலுமே
வைத்தபுவ னத்திருந்தார் மற்றையவர்—ஒக்கும்
பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

(கு - ரை) அப்பர் முதல் சித்தாந்திகள் - சமயகுரவர் முதலியோர். மற்றையவர் என்றது பிரமா விஷ்ணு இந்திரன் முதலியோரை; ஒப்பு: 87-ஆம் செய்யுள். சைவசித்தாந்திகள் அல்லா

தாரை எனலும் ஆம். வைத்த-வெவ்வேருக வைத்த. புவனத்து: அழியும் இயல்புடைய சுவர்க்காதி புவனங்களில்.

முதல் நான்கு கவிகளும் சோபான முறையாகக் கூறப்பட்டன. அம்முறையாவன : வைதிகம், சைவம், சைவத்துள் சரியை, கிரியை, யோக மார்க்கம், ஞானத்தாற் சிவனடி சேர்தல் (சித்தாந்த முத்தி.) புறச்சமயமும் சைவர்க்குடன்பாடே என்பது, "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் ... வேத, சிரப் பொருளை மிகத்தெளிந்துஞ் சென்ருற் சைவத், திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகம் செலுத்தியபின் ஞானத்தாற் சிவ னடியைச் சேர்வர்' (சிவஞான சித்தியார், பக்கம், 8-ஆம் சூத்திரம், செய்யுள் 11), "விரிவிலா வறிவி னூர்கள் வேறொரு சமயஞ் செய்து, எரிவினாற் சொன்ன ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்" (அப்பர் தேவாரம்) என்பவற்ருல் விளங்கும். 5

## வான் சிறப்பு

6 அழித்துலகை யாக்குதலா லந்தமே யாதி
அழித்தொன்றை யாக்குவது முண்டோ வெனிற்கொள்
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(கு - ரை) அழித்துலகை...ஆதி-'ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை, எனவே சங்காரமே முதல்' என்ற கருத்துடைய சிவஞான போதத்து முதற் சூத்திரத்தை யொட்டி இது கூறப்பட்டது.

அழித்தொன்றை...எனில் - ஒரு பொருள் ஒன்றை அழித்து மீண்டும் ஆக்குவது உண்டோ என்று வினவினுல். 6

7 அடியவரை நீத்தரனுக் கன்புசெய்ய மாறன்
மறையுமறுத்துப் பல்லுயிரும் வாடும்—படியில்
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(கு - ரை) மாறன் - குலபூஷண பாண்டியன். அடியவர் - பாண்டிநாட்டிருந்த அந்தணர், இக்கவியிற் கண்ட வரலாறு,

" வள்ளல் குலபூ டணன்திங்கள் வாரந் தொடுத்துச் சிவதருமம், உள்ள வெல்லாம் வழாதுநோற் றெழுகும் வழியால் தன்னுட் டில், எள்ள வில்லா வேதியரை யிகழ்ந்தா னதனுன் மறை மறுத்து, வெள்ள மருக வளங்குன்றி விளைவஃ கியது நாடெல் லாம்" (திருவிளையாடல். உலவாக் கிழியளித்த படலம். 2) என் னும் பாட்டால் விளங்கும். 7

## நீத்தார் பெருமை

8 ஆர்பெரியர் நீத்து மரனறிய நின்றதிரு
நீலகண்டர் போலரிதி னீத்திலரால்—ரால ர்
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(கு - ரை) பெரியர் ஆர் நீத்தும் - பெரியோர் ஆர் துறந்தும். வாய்ப்பொன்று மில்லாத காலத்தில் துறவற வாழ்க்கையை மேற்கொண்டொழுகும் மற்றவரிலும், திருநீலகண்டர் இல்லறத் தின்கண் மனைவியோடு இருந்துகொண்டே சிற்றின்பத்தை நீத்த தனுல் அவருடைய அச் செயல் செயற்கருஞ் செயலாயிற்று. 'மாதுசொன்ன, சூளா லிளமை துறக்கவல் லேனல்லன்' எனத் துறவில் தலைசிறந்த பட்டினத்து அடிகள் இதனைப் பாராட்டிக் கூறியதும் அறிக. 8

9 புறமகமென் றியாவும் புகல்வனவும் காணுற்
திறநுவல் கின்ற சிவநூல்—நெறியிற்
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

(கு - ரை) புறம் அகம் - புறச்சமயம் அகச்சமயம். வேறு சமய நூல்களில் காணப்பெறுத திறனை நுவல்கின்ற சிவநூல் என்க; சிவநூல் - சிவஞானபோதம், சிவாகமங்கள் முதலியன. சிவநூல் நெறியாலேயே உலகை யறிதல் முடியுமென்பது இக் கவியின் கருத்தாகும்.

சுவை முதலான தன்மாத்திரைகளின் கூறுபாடுகளை அறிப வனிடத்தே உலகம் நிற்கும். 9

## அறன்வலி யுறுத்தல்

10 தண்டிக் கருள்புரிந்து தக்கன் சிரமறுக்கும்
அண்டர்பெரு மானருளு மாகமத்திற்—கண்ட
அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(கு - ரை) தண்டி - சண்டேச நாயனார்; 186-ம் கவியையும் நோக்குக. இவருக்குச் சிவபெருமான் அருளியது சண்டேச பதவி (பெரிய புராணம், சண்டேசுர. 56.) தக்கன் - தக்ஷன். இவன் சிவபிரானிடத்து வெறுப்புற்று அவரை அழையாமல் மற்றத் தேவர்களைக்கொண்டு பெரியதொரு வேள்வியைத் தொடங்கினான். அப்போது அவன் சிவநிந்தைக்கும் அபசாரத்துக்கும் ஆளாகவே சிவபெருமான் வீரபத்திரரைக்கொண்டு அவன்தலையை அறுப்பித்து வேள்வியையும் அழித்தார்; 'தலையிழந்தான்' (தண்டியலங்காரம், சூ 21, மேற்) தக்கன் ஒறுக்கப்பட்டமை 49, 127-ஆம் கவிகளிலும் கூறப்படும்.

அண்டர் பிரான் கூறும் ஆகமத்திற் கண்ட அறத்திலும் சிறந்ததில்லை என்பது சண்டேசுவரர் வரலாற்றால் தெரியவரும். அதனை - ஆகமத்திற் கூறிய அறத்தினை. மறத்தலால் வரும் தீங்கினை உணர்த்துவது தக்கன் வரலாறாகும்.

தாம் சிவபூஜை செய்து வரும்போது அதற்கு இடையூறாகப் பூஜைக்குரிய உபகரணங்களைக் காலால் உதைத்துத் தள்ளிய தம் தந்தையும் குருவுமாகியவரின் தாளைச் சண்டேசுவரர் துணித்தார். இச்செயல் அறச்செயலேயாகச் சிவபெருமான் அருளுக்கு இவர் பாத்திரரானார். 10

11 காணலா மீசன் கழல்பணிந்து நல்லறங்கள்
பேணுவார் நாளும் பெரும்பயனைப்—பேணும்
அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

(கு - ரை) நல்லறங்கள் - பசு தர்மங்கள். 'ஈசன் கழல் பணிந்து நல்லறங்கள்பேணுவார் நாளும் பெறும்பயனைச் சிவிகை

பொறுத்தாரோடு ஊர்ந்தானிடைக் காணலாம்' என முடிக்க. சிவிகையில் ஊர்பவனையும், அதைத் தூக்குபவனையும் நோக்கி அறங்களின் பயனைத் தெரிந்துகொள்ளலாமென்பது கருத்து. 11

12 தருமர் பிறர்நெறியாற் சார்ந்ததுவிண் ணீசன்
அருணெறியா லீனருமே லானார்—அருநூல்
அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(கு - ரை) தருமர் - பாண்டு புத்திரர்களில் முதல்வர். தருமர் கண்ணபிரானை வழிபட்டு வந்தவராதலால் 'பிறர் நெறியால்' என்றார். தருமருக்கு அழிதல் மாலையதான சுவர்க்க போகமே கிடைத்ததென்பார். இது பாரதத்துள் பாண்டவர் இவ்வுலகை நீத்த வரலாற்றைக் கூறும் பகுதிக்குச் சொர்க்காரோகண பருவம் என்ற பெயருண்மையால் விளங்கும். ஈனரும் மேலானார் என்பது திருநாளைப் போவார், திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார், பாணபத்திரர் என்பவர்கள் வீடு பேற்றை அடைந்த வரலாறுகளால் விளங்கும். அருநூல் - சிவநூல். 12

பாயிரம் முற்றும்

## இல்வாழ்க்கை

13 இல்வாழ் மருத்தர்போ லீசனடிக் கன்புசெய
வல்லாரே ரோற்க வருவானேன்—எல்லாரும்
ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(கு - ரை) மருத்தர் - கும்பகோணத்தில் வாழ்ந்து வந்த ஒரு சிவனடியார்; இவர் தினந்தோறும் சிவநேசர்களைத் தேடி அவர்களுக்கு உணவளித்து வந்தார். தம் வாழைத் தோட்டத்தில் உள்ள வாழைகளையெல்லாம் இலையும் பூவும் காயும் இல்லாமல் எல்லாவற்றையும் அடியாருடைய உணவுக்கே இவர் பயன்படுத்தினர். அந்த ஊரில் திருத்தங்கி என்பவனும் வாழைத்

தோட்டம் ஒன்று வைத்திருந்தான். உலுத்தனாகிய அவன் ஓர் இலையையும் பறிக்காமல் தோட்டத்தை நன்றாகப் போற்றிவந்தான். ஒருசமயம் ஔவையார் அவன் வீட்டுக்கு விருந்தினராக வரவே அவன் அவரை மருத்தர் வீட்டுக்குப் போகுமாறு வழி காட்டினான். அன்று மருத்தர் வீட்டில் வாழையிலை கிடையாமற் போகவே திருத்தங்கியின்பால் அவர் வந்து வாழையிலையைக் கடன் கேட்க அவன் மறுத்துவிட்டான். ஔவையார் இச்செய்தியை அறிந்து வாழையிலை யில்லாமலே சாப்பாட்டை முடித்துக்கொண்டு ஒரு பாடலைப் பாடினாரென்று கர்ணபரம்பரைச் செய்தியொன்று வழங்குகிறது. 'திருத்தங்கி தன் வாழை தேம்ப பழுத்து நிற்கும், மருத்தன் திருக்குடந்தை வாழை-குருத்தும், இலையுமிலை பூவுமிலை காயுமிலை என்றும், உலகில் வருவிருந்தோ ருண்டு' என்பது அது; 150-ஆம் செய்யுளையும் காண்க. 13

## வாழ்க்கைத் துணை நலம்

14 முளையா லமுதமைத்து முக்கணர்பா லன்பன்
இளையான் குடிமாற னில்வாழ் துணைபோல்
மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(கு - ரை) முளை - நெல் முளை; முக்கணர் - சிவபெருமான். சிவபெருமான் விருந்தினராக அகாலத்தில் வந்தபோது, இளையான் குடி மாறனார் கொணர்ந்து கொடுத்த, அன்று பகலில் வயலில் வித்திய நெல் முளைகளைக் கொண்டு அவர் மனைவியார் திருவமுது அமைத்தமையின் அவ்வம்மையாரை, 'கொண்டான் வளத்தக்காள்' எனல் தகும். 14

15 உலகுண் டுறங்கு மொருத்தி யொருத்தி
சிலகொண் டரனுவப்பச் செய்யு மறனென்றால்
இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதென்
இல்லவண் மாணாக் கடை.

(கு - ரை) ஒருத்தி உலகுண்டு உறங்கும்: ஒருத்தி - திருமாலாகிய சக்தி; திருமால் ஈசனுக்குச் சக்தி யாவரென்பது 46-ஆம்

செய்யுளாலும் தெரியவரும். "பிரிவிலா வமரர் கூடிப் பெருந்தகைப்பிரானென் றேத்தும், அரியலாற் றேவி யில்லை யையனை யாறனார்க்கே" (தே. திருநா. திருவையாறு.) உலகத்தையே உண்ணத்தக்க பெருவயிறு படைத்து ஒரு வேலையும் செய்யாமல் உண்பதும் உறங்குவதுமாக இருப்பன் என்பது நயம். உறங்கும்-செயலற்றிருக்கும் எனினும் அமையும். பின் உள்ள ஒருத்தி உமாதேவியார். சில - இரண்டு நாழி. உமா தேவியார் சிவபெருமானிடம் இரண்டு நாழி நெல் பெற்று முப்பத்திரண்டு அறமும் புரிந்த கதை காஞ்சிப்புராணம், பெரியபுராணம் (25 : 7) முதலியவற்றால் தெரியவரும். "நனைமாட்சி மென்கொன்றைத் தாரோன் தருமிரு நாழிநெல்லால், வினைமாட்சி கொண்டுயி ரெல்லா மளித்தருண் மேன்மையினால், மனைமாட்சி யெய்து முனக்கே பெருங்கற்பு மாட்சியன்றி, பினைமாட்சி யார்க்குண் டுலகீன்ற குன்றைப் பெரியம்மையே" (பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை) என்ற செய்யுளை இதனுடன் ஒப்பு நோக்குக. 15

16 அறவோ னகத்திருந்தா ளன்புகண் டேங் கண்டேம்
இறையோ டிறந்தா ளியல்பு முறையுட்
சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(கு - ரை) அறவோன்-கௌதமர். அகத்திருந்தாள்-அகலிகை. அன்பு கண்டேம் என்றது அகலிகை கௌதமருக்குத் துரோகஞ் செய்ததைக் குறிக்கும். இறையோடு இறந்தாள் - திருநாவுக்கரசு நாயனாரின் தாயாராகிய மாதினியார். இறை - கணவர். இயல்பும் கண்டேம். இந்த அம்மையார் தம் கணவனும் புகழனார் இறந்ததும் உடன்கட்டை யேறினார் என்று பெரியபுராணம் கூறும். 16

## புதல்வரைப் பெறுதல்

17 வேணுபுர நாதரருண் மேவுதலுஞ் சம்பந்தர்
தாதையினு மேனோருந் தாமகிழக் காணுதலால்
தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

(கு - ரை) வேணுபுரம் - சீகாழி. அருள் மேவுதலும் - சிவ ஞானத்து இன்னமுதம் உண்ணப் பெற்றவுடன். தாதையினும்- (சம்பந்தரின்) தந்தையாகிய சிவபாத ஹ்ருதயரைக் காட்டிலும். ஏனோரும் - சீகாழியிலுள்ள அந்தணரும் பிறரும். இவர்கள் சிவ பாத ஹ்ருதயரைக் காட்டிலும் அதிகமாக மகிழ்ந்தமை பெரிய புராணத்தில், திருஞான சம்பந்தர் புராணத்து 90-94 ஆம் செய்யுட் களால் விளங்கும்.

அறிவுடைய பிறர் தந்தையினும் மகிழ்வர் என்பது இதிற் பயின்றுள்ள குறளின் கருத்தாகும். 17

18 பெண்பெறினு மென்ன பிழையோ தடாதகைபோல்
எண்பொருளு மீசனும்வந் தெய்துமே --கொண்ட
எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(கு - ரை) ஆண் மகவைப் பெறுதலே சிறப்பு என்பார் கொள்கையை மறுத்துக் கூறுகின்றாராதலின், 'பெண் பெறினும்' என்று உம்மை கொடுத்துக் கூறினார். 'பெண் பெற்றோயோ புண் பெற்றோயோ' என்ற பழமொழியை இவர் கண்டிப்பவராவர். தடாதகை-மலயத்துவச பாண்டியனுக்கு உமாதேவியாரின் அமிச மாகப் பிறந்த பெண் குழந்தை. எண்பொருள் - (1) மனத்தில் எண்ணும் பொருள்; (2) மதிப்புடைய பொருள்கள்; (3) அஷ்ட ஐசுவரியம். தடாதகைப் பிராட்டியாரால் மலயத்துவசன் சோம சுந்தரக் கடவுளை மருமகனாகப் பெற்றதுமன்றி அவரால் வீடு பேற்றையும் எய்தினமையை நினைந்து இங்ஙனம் கூறினார்.

"கற்றோ ரறிகுவர் மக்கடம் பேறெனக் கட்டுரைத்த, சொற்றா னொருபெண் ணொழித்ததென் பாரொடு தொல்லுலகில், நற்றாண் மகப்பெறு கென்றாசி சொல்பவர் நாணவுனைப், பெற்றான் மலை யரை யன்குன்றை வாழும் பெரியம்மையே" (பெரியநா. கட்டளைக்.) என்ற செய்யுளோடு இதனை ஒப்பிடுக. 18

## அன்புடைமை

19 கண்ணுதலோன் கண்ணேவு கண்டளவிற் கண்ணப்பன்
கண்ணினீர் சோரக் கதறுமால் — உண்ணெகிழும்
அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

(கு - ரை) கண்ணுதலோன் - காளத்தி நாதரான சிவபெருமான். கண்ணப்ப நாயனரது மெய்யன்பு இக்குறளுக்கு ஏற்ற உதாரணமாகும். 19

## விருந்தோம்பல்

20 ஈசனடி யார்விருந்தென் றிட்டுலவாக் கோட்டைபெற்ற
நேசர் குறைவின்றி நிற்றலா னுடி
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(கு - ரை) உலவாக் கோட்டை - எடுக்க எடுக்கக் குறைவுபடாத அரிசி மூட்டை. மதுரையிலிருந்த வேளாள பக்தசிகாமணியொருவர் அடியாரைத் தேடி யமுதூட்டி வருதலைத் தம்பணியாகக் கொண்டு ஒழுகி வந்தார். வயல்கள் வளங்குன்றி, வருவாய் இல்லாத காலத்திலும் அவர் தம் வைராக்கியத்தை விடாமல் விருந்ததைக் கண்டு சோமசுந்தரக் கடவுள் அடியாரை அருத்தும் பொருட்டு அவருக்கு உலவாக் கோட்டையொன்றை அளித்தருளினர் என்பது திருவிளையாடற் புராணத்திற் கண்ட வரலாறுகும். 20

## இனியவை கூறல்

21 முதுகிரியா னன்பர் முனிந்தருள வந்த
தகுதி யுடையான் சரிதஞ் சொலுமே
பணிவுடைய னின்சொல னுதலொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(கு - ரை) முதுகிரியான் அன்பர் - பழமலை நாதரிடம் அன்பு கொண்ட அகத்தியரை யுள்ளிட்ட ஐம்பது முனிவர்கள். தகுதியுடையான் - வரர் என்ற முனிவர். அவரிடம் அகத்தியர் முதலிய

ஐம்பதின்மர் சென்றபோது அவர் இவர்களைமதியாது பணிவின்றி இருக்க இவர்கள் அவரை எருமைக் கடாவாகுமாறு சபித்தனர். அவரே மகிஷாசுரனாக அவதரித்துப் பின்னர் உமாதேவியாரால் சாபம் நீங்கப்பெற்றா ரென்பர். 21

## செய்ந்நன்றி யறிதல்

22 எள்ளளவு காணு தெலிசெய்த நன்றிக்கா
வள்ள லுளகாள வைத்தருளும்—நல்லாய்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

(கு - ரை) வேதாரணியத்திலுள்ள சிவாலயத்தில் மங்கும் நிலையிலிருந்த திருவிளக்கை ஓர் எலி தூண்டிப் பிரகாசிக்கச் செய்த நன்றிக்காகச் சிவபெருமான் அவ்வெலிக்கு மறுபிறவியில் அரச பதவியை வழங்கினார் என்பது வரலாறு. அவ்வரசரே பலிச் சக்கரவர்த்தியாவர். நல்லாய்-பெண்ணே. "நிறை மறைக் காடு" (தே. திருநா.) 22

23 அன்று குணனுய்ந்தா னந்தணனைக் கொன்றுமரன்
நன்றி கொல்லசுரர் நாடறியப்—பொன்றுதலால்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(கு - ரை) குணன் - வரகுண பாண்டியன்; நாமைக தேசம். அவன் ஒரு சமயம் வேட்டைமேற் சென்று திரும்பி வருகையில் வழியில் களைத்துப் படுத்திருந்த ஓர் அந்தணன் மீது அறியாமற் குதிரையைச் செலுத்தவே அம்மறையவன் மாண்டனன். அதனால் பிரஹ்மஹத்தி தோஷம் பாண்டியனை விடாமற் பற்றிக்கொள்ள வரகுணன் மிகவும் வருந்தி ஆலவாய் எம்பிரான் கோவிலைப் பன்முறை வலம் வந்து வழிபட்டு அம் மூர்த்தியின் ஆஞ்ஞைப்படியே திருவிடைமருதூர் சென்று அங்கே அந்தத் தோஷத்தைத் தீர்த்துக்கொண்டான் என்பது திருவிளையாடற் புராணத்திற் கண்ட வரலாறு. நன்றி கொல்லும் அசுரர் - முப்புரவாசிகள். சிவபெருமானால் பல்வகைச் செல்வங்களைப்

பெற்று வீறுடன் இருந்த அசுரர்கள் பின்னொருகாலத்தில் திருமாலால் ஏவப்பட்ட நாரதர் வார்த்தையைக் கேட்டுச் சிவ நிந்தனைக்கு உள்ளாகி அழிந்தனர் என்பர். இச்செய்தி 136-ஆம் செய்யுளாலும் விளங்கும். 23

நடுவு நிலைமை

24 ஈசனு மையா ளிடைப்பட்டு வாரமாய்ப்
பேசலு மாயோன் பெரும்பாம்பாம்—ஆசிற்
கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

(கு - ரை) வாரமாய் - ஒருமருங்கு பற்றிய அன்புடன். சிவபெருமானும் உமாதேவியாரும் கழகமென்னும் ஆட்டத்தை ஆடும்பொழுது தம்முள் வெற்றி தோல்விகள் எவருடையன வென்று அறிந்து சொல்லுவதற்குத் திருமாலை மத்தியஸ்தராக வைத்தார்கள். திருமால் நடுநிலைமை தவறி ஒருபட்சமாகப் பேச உமாதேவியார் அவரை மலைப்பாம்பாமாறு சபித்தனர் என்பது வரலாறு; கந்த. கயமுகனுற்பத்திப். 174; "அரிபாம் புருக்கொள் சாபாரி" (திருக்கழுக்குன்றக் கோவை, 168.) ஆசில்-விரைவில். 24

25 பிள்ளையினுங் கைத்தொண்டு பேணுதலா லப்பருக்கு
நல்ல படிக்காசு நல்குமால்—எல்லாம்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(கு - ரை) பிள்ளை - திருஞானசம்பந்தர்; முருகக் கடவுளே சம்பந்தராக அவதரித்தார் என்ற கொள்கை பற்றி அவரைச் சிவபிரானுக்குப் பிள்ளை என்பர். கைத் தொண்டு - கையினாற் செய்யும் உழவாரப் பணி. நல்கும் - கொடுப்பார். சம்பந்தரும் அப்பரும் திருவீழிமிழலையில் இருந்தபோது பஞ்சகாலம் வர, இருவரும் சிவபிரானிடம் பொற்காசு பெற்று அடியார்களை உண்பிக்கும் தொண்டினை மேற்கொண்டார்கள். அப்போது சிலநாள் சம்பந்தர் மாற்றுக் குறைந்த காசுபெற்று வந்தாரென்றும், அதனால் அதனை மாற்றி உணவுப் பொருள்களை வாங்குவதில் நேரம்

வீணையிற்றென்றும், அதற்குள் அடியவர்கள் அப்பர்தம் மடத்திலேயே உணவருந்திச் சென்றனரென்றும் பெரிய புராணம் முதலிய நூல்கள் கூறும்; "வாசி தீரவே, காசு நல்குவீர், மாசின் மிழலையீர், ஏச லில்லையே" (தே. திருஞா.) சிவபெருமான் தம் புதல்வரென்றெண்ணி நடுநிலை பிறழாமை இங்கே கருதத்தக்கது. 25

## அடக்க முடைமை

26 ஆனை யிழிந்து மரசிறைஞ்சும் போலியைக்கண்
டேனையர னன்பரென்று லென்படுமோ—மாநிலத்துள்
எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(கு - ரை) அரசு - சேரமான் பெருமாளுநாயனார். போலியைக் கண்டு - முழுநீறு பூசிய சிவனடியாரைப் போல் தோன்றிய வண்ணானைக்கண்டு. இறைஞ்சும் - வணங்குவார். சேரமான் பெருமாளுநாயனார் யானைமீது பவனி வரும்போது, மேனியில் உவர்மண் படியப்பெற்று வந்த ஒரு வண்ணானைக் கண்டு, 'சிவனடியாரின் நினைவை இவர் நமக்களித்தார்' என்றெண்ணி யானையினின்றுமிழிந்து அவனை வணங்கினார் என்பது பெரியபுராணத்திற் கண்டது. தமிழ்விடுதூது, கண்ணி, 176 பார்க்க. என்படுமோ - எத்தகைய பணிவை மேற்கொண்டு என்ன என்ன செய்வாரோ! பணிதல் - பெருமிதமின்றி யடங்குதல். 26

27 சோதி திறமறிந்து சொல்லவறி யாதுசொல்லி
வேதநிலை கண்டானு மெய்ம்மறந்தான்—ஆதலால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(கு - ரை) சோதி - சிவபிரான். வேத நிலைகண்டான் - வியாசர். வியாச முனிவர் ஒரு காலத்தில் காசிப் பதியில் திருமாலே முதல்வர் என்றுகூறித் தம் கையைத் தூக்க, அதனைத் தூக்கியபடியே நிற்கும்படி நந்தி தேவர் பணித்தனரென்பது வரலாறு. கையை வெட்டியதாகக் கூறுவதுமுண்டு. 'ஐயிரு புராண நூ லயலர்க் கோதியும், செய்யபன் மறைகளுந் தெரிந்

தும் மாயையால், மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய, கையறு நந்திதன் கழல்கள் போற்றுவாம்' (கந்தபுராணம், கடவுள். 19) என்ற செய்யுளை நோக்குக. 27

## ஒழுக்க முடைமை

28 தில்லை மறையோர் சிவமயஞ் சார்ந்தொழுகி
இம்மையே சாரூப மெய்தினார் நல்ல
ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும்.

(கு - ரை) தில்லை மறையோர் - தில்லைவாழந்தணர் மூவாயிரவர். இவர்கள் இம்மையிலேயே சாரூபமெய்தினமை திருஞான சம்பந்தருக்கு இவர்கள் சிவகணங்களாகத் தோன்றினமையினால் விளங்கும் (பெரியபுராணம், திருஞான சம்பந்த. 170.) 28

## பிறனில் விழையாமை

29 எந்தை பலிக்கென் றியங்குநாட் பின்றொடர்ந்த
மென்றொடியார் தேத்தும் விழைந்திலார்—என்ப
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(கு - ரை) எந்தை - சிவபெருமான். பின்றொடர்ந்த மென் தொடியார் தேத்தும் - தாமாகப் பின் தொடர்ந்து வந்த தாருகா வனத்து முனிவருடைய பத்தினிமாரிடத்திலும்; விழைந்திலார் - விருப்பத்தைச் செய்திலர். ஒரு காலத்தில் தாருகா வனத்தில் நடந்த வரலாற்றை இது குறிக்கும். அறனொன்றோ, ஆன்ற ஒழுக்கு - அறமும் ஆம், நிரம்பிய ஒழுக்கமும் ஆம். 29

## பொறை யுடைமை

30 பித்த னெனத்தமக்குப் பேர்படைத்து மெந்தைபிரான்
வைத்தவனைத் தோழனென வாழ்வித்தார்—நித்தம்
அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.

(கு - ரை) எந்தை பிரான் - திருவெண்ணெய் நல்லூரி லுள்ள சிவபெருமான். பேர்படைத்தும் - சுந்தரமூர்த்தி நாயனாரால் பெயரைப் படைத்தாலும். வைத்தவனை : வைதவனை என்பதன் விரித்தல் விகாரம். தோழன் என : சுந்தரமூர்த்திக்குத் தம்பி ரான் தோழர் என்பது ஒரு திருநாமம். இதிற் கண்ட வரலாறு பெரிய புராணத்தாலும், 'பித்தா பிறை சூடி' என்ற தேவாரப் பதிகத் தாலும் விளங்கும். 30

31 கல்லெறியை யும்பொறுத்துக் கண்ணுதலார் தாமறந்து
நல்ல பதமவர்க்கு நல்கினார்—வல்லி
பொறுத்த விறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(கு - ரை) கண்ணுதலார் - சிவபிரான். அவர்க்கு - கல்லால் எறிந்த சாக்கிய நாயனாருக்கு. புறச்சமயத்தாராகிய சாக்கிய நாயனார் சிவபெருமான்மீது தமக்கு மிகுந்த அன்பு இருந்தும் தம் மதத்தாரின் கட்டுப்பாட்டுக்கு அஞ்சினவராகிக் கற்களை மலர்க ளாகப் பாவித்துச் சிவலிங்கத்தின்மீது சாத்தும் பாவனையாக எறிந்தார். இந்தத் தலையன்பு காரணமாக அவருக்குச் சிவபதம் கிடைத்ததென்பது வரலாறு. வல்லி : விளி. 31

அழுக்காறாமை

32 புத்த னிறந்தான் பொறாமைசெய்து செய்யார்க்கு
நித்தரு முண்டாய் நிறைந்தபுகழ்—மெத்த
அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
[1]ழுக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(கு - ரை) புத்தன் - புத்த நந்தி. பொறாமைசெய்து - சம் பந்தர் சின்னமும் கீர்த்தியும் பெற்று வருவதைக் கண்டு பொறா மல். செய்யார்க்கு - பொறாமை செய்யாத சிவனடியார்களுக்கு; செம்மையையுடையார்க்கு எனினும் ஆம். புகழ் நிறைந்த; நிறைந்த : முற்று.

(பி - ம்.) 1. 'பெருக்கத்திற்'

திருஞான சம்பந்தர் போதி மங்கை என்ற ஊரிலே சின்னம் ஒலிப்பச் சிவிகை யூர்ந்து செல்லும்போது அங்கே இருந்த பௌத்தர்கள் வந்து 'வல்லமை யற்றூர்க்கு இவை ஏன்?' என்று வழி மறித்தனர். அவர்களில் தலைவனான புத்தநந்தி ஆளுடைய பிள்ளையுடன் வாதுக்கு வரப் பிள்ளையாரின் எழுத்தாளர், 'புத்தர் சமண் கழுக்கையர்......அத்திரமாவன அஞ்செழுத்துமே' என்ற பதிகத்தைப்பாட ஓர் இடிவிழுந்து புத்தநந்தி இறந்துபட்டான் என்பது பெரிய புராணத்திற் கண்ட வரலாறு. 32

வெஃகாமை

33 இரந்துண்டு வாழ்ந்து மிறைவர் புலவர்
இரந்த பொருள்கவர்ந்த தீந்தார் மறாந்தும்
இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(கு-ரை) புலவர் என்றது சுந்தரமூர்த்தி நாயனுரை. சேரமான் பெருமாணுயனுர் சுந்தரமூர்த்தியாருக்கு அளித்த நிதியைத் திருமுருகன்பூண்டியின் அருகில் பூதகணங்களை வேடுவராக அனுப்பிச் சிவபிரான் கவர்ந்துகொண்டு சுந்தரர் வேண்ட மீட்டும் அதனை வருவித்துக் கொடுத்த செய்தியை இது புலப்படுத்தும். 33

புறங்கூறுமை

34 சங்கறுக்குஞ் சாதிசொலுஞ் சங்கரனை நக்கீரன்
அன்றுபழி சொன்னதுபோலார் சொல்வார்—என்றும்
பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும்.

(கு - ரை) சங்கு அறுக்கும் சாதி சொல்லும் சங்கரனை - சங்கை அறுக்கின்ற இழிந்த சாதியிற் பிறந்தவன் கீரன் என்று பழித்துக் கூறும் சங்கரனை. அன்று - தருமிக்காகச் சிவபெருமான் புலவராகி வந்த அந்நாளில். சிவனுர் கீரரைப் பழித்துக் கூறிய செய்யுளும் அதற்கு மாருக நக்கீரர் பகர்ந்த பாட்டும் கீழ் வருவனவாகும் :

'அங்கங் குலுங்க அரிவாளின் நெய்தடவிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ என்கவியைப்
பாரிற் பழுதென் பவன்';
'சங்கறுப்ப தெங்கள்குலம் சங்கரனார்க் கேதுகுலம்
பங்கமுறச் சொன்னால் பழுதாமோ—சங்கை
அரிந்துண்டு வாழ்வோம் அரனாரைப் போல
இரந்துண்டு வாழ்வ தில்லை.'

வங்கிய சூடாமணி என்னும் பாண்டியன் தன் மனத்திற் கொண்டுள்ள கருத்தை ஒரு செய்யுளிற் சொல்லவல்லார் இதனைக் கொள்ளவென ஒரு பொற்கிழி யமைத்தனன். புலவரால் அவன் கருத்தை அறிய இயலாமற் போகவே தருமி என்பான் சிவபிரான் பாடிக்கொடுத்த 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற செய்யுளை அரசன் முன் கொண்டுசென்று காட்டிக் கிழியை அறுக்கவரும் சமயம் கீரன் அது குற்றமுடைய செய்யுள் என்று கூறிவிட்டான். ஆகவே, சிவபிரான் புலவராகி வந்து கீரனொடு வாதிட்டு அவனைப் பொற்றாமரையில் வீழ்த்திக் கிழியைத் தருமிக்கு வழங்கி மறைந்தருளினார் என்பது வரலாறு. 34

பயனில சொல்லாமை

35 இறைவர் மதலை யெதிரிசைவு கூறும்
வெறுமுரையாற் றென்றுகழு வேறும்—பிறர்போல்
பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும்.

(கு - ரை) இறைவர் மதலை - முருகக் கடவுளின் அவதாரமாகிய திருஞான சம்பந்தர். எதிர் - மாறுக. இசைவு - பந்தயம். வெறும் உரை - பயனற்ற சொற்கள். கூன்பாண்டியன் வெப்பு நோயால் வருந்தும்போது சம்பந்தர் அதனை நீக்க வந்தார். அச் சமயம் சமணர் அரசனது உடலின் ஒரு பாதியிலுள்ள நோயைத் தீர்ப்பதாகக் கூறி அதுமுடியாதவராகிப் பின்னும் தங்கள் தங்கள் கொள்கைகளிலொன்றை எழுதிய ஏட்டைப் புனலிலும் கனலி
ச் சோதிக்கச் சம்பந்தரை வாதுக்கிழுத்து அவற்றிலும்

தோற்றனர். தோற்றவர் கழுவேறி மாய்தல் வேண்டும் என்ற பழைய ஒப்பந்தப்படி அவர்கள் அப்பொழுது தாமாகவே கழு வேறி மடிந்தார்கள் என்பது வரலாறு. இது 30-ஆம் பாட்டா லும் புலனாகும். 35

## தீவினை யச்சம்

36 தையலார் கற்பழியச் சார்வானை மாமதுரைத்
தெய்வமே சென்றெறுக்குஞ் செய்தியால்—நொய்தின்
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(கு - ரை) சித்தன் என்றவன் சிவபக்திச் செல்வரான ஒரு வயோதிகப் பணிக்கரிடம் சில பகல் மாணவனாக இருந்து பிறகு அவருக்கு விரோதமாகப் பல மாணவர்க்கு யுத்த முறையைக் கற்பிக்கும் தொழிலை மேற்கொண்டு அவர் பிழைப்பைக் கெடுத்த தன்றி அவருடைய மனைவியையும் இச்சித்தான். சோமசுந்தரக் கடவுள் அதனைப் பொறுதவராகி முதிய பணிக்கர் வேடம் பூண்டு சித்தனை வலிந்து சண்டைக் கிழுத்து அவனுடைய அங்கங்களை வேறுவேறாக வெட்டி வீழ்த்தினர் என்பது முதலிரண்டடிகளிற் கண்ட வரலாறாகும்; திருவிளையாடற் புராணம், அங்கம் வெட்டிய படலம். 36

## ஒப்புர வறிதல்

37 தருவும் வரிசைபெறுஞ் சங்கரனுக் கன்பர்
ஒருவர் திருவுடைய ராகத்—தெருநடுவே
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

(கு - ரை) தருவும் வரிசைபெறும் - மரமும் பல வரிசைகளை அடையும். அன்பரொருவர் - வரகுண பாண்டியர். திருவிடை மருதூரில் உதிர்ந்த வேப்பங்கனிகள் அவருக்குச் சிவலிங்க வடிவ மாகத் தோற்ற வேப்ப மரங்கள் வெயிலில் உலரா வண்ணம் அவற்றிற்குப் பந்தல்கள்போட்டு மேற்கட்டிகளும் கட்டுவித் தார். மருதவனப் புராணம் பார்க்க. ஆக - ஆவதனால்.

திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, 28 : 51-2. 37

### ஈகை

38 தொல்லைமணி மன்றுடையார் தொண்டர்க்குப் பெண்டிரையும்
இல்லையென நீந்தா ரியற்பகையார்—வல்லி
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

(கு - ரை) இயற்பகையார் - இயற்பகை நாயனார். சிவனடியார் வேடத்தில் வந்த சிவபெருமான் இவரிடம் வந்து இவருடைய மனைவியைத் தம்முடன் அனுப்பும்படி வேண்ட இவர் அங்ஙனமே செய்தாரென்ற வரலாறு பெரிய புராணத்திலுள்ளது. வல்லி - கொடி போன்றவளே. 38

### புகழ்

39 தோன்றி யரனருளாற் றொண்டர்வென் றார் தோற்றமணர்
ஏன்பிறந்தே மென்றே யிடருற்றார்—ஆய்ந்தறிஞர்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(கு - ரை) தொண்டர் - சம்பந்தர். வென்றார் - வாதத்தில் வென்றார். இதிற்கண்ட வரலாறு 35-ஆம் கவியின் குறிப்புரையில் உள்ளது. 39

இல்லறவியல் முற்றும்

## துறவறவியல்

### அருளுடைமை

40 அருளாற் பிரம்பி னடியுண்டார்க் கில்லை
துயர்தா னுலகனைத்துந் தொல்லும்—ஒருநாளும்
அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி.

(கு - ரை) அடியுண்டார் - வந்தியென்னும் ஒரு மூதாட்டியின் ஆளாக வந்து பாண்டியனால் அடிபட்ட சிவபெருமான்.

அனைத்தும் சொல்லும் - அந்த வலியாகிய துன்பத்தை எல்லா உலகங்களிலும் உள்ள யாவரும் 'என்மேற் பட்டது, என்மேற் பட்டது' என்று கூறுவார்கள். துயர்தான் : இடைநிலை விளக்கு. (மத்திம தீபம்.) இது திருவிளையாடற் புராணத்துள்ள பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலிற் கண்ட வரலாறு. 40

## புலான் மறுத்தல்

41 புத்தனு னன்றுசிவ போதனெனுஞ் சைவனென
வைத்ததிரு வள்ளுவர் வாய்மொழிதான் — நித்தம்
தினற்பொருட்டாற் [1]கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(கு - ரை) வாய்மொழி - உண்மை மொழி. வாய்மொழி : எழுவாய்; 'நித்தம் தினற்பொருட்டாற்...தருவாரில்' என்பது பயனிலை. 'உயிர்களைக் கொன்று தின்னல் பாவமே ஒழிய, இறந்த பிராணிகளின் ஊனைத் தின்பது பாவமாகாது' என்ற பௌத்த மதக் கொள்கையை மறுத்து நாயனார் இக்குறட்பாவை எழுதியுள்ளார். ஆதலின் 'அவர் பௌத்தரல்லர், சைவரே' என்பது இந்நூலாசிரியரின் கருத்தாகும். 41

42 நாரைபுலா லுண்ணாது நல்லறமேற் கொண்டொழிந்
தீசனுல கேறி யிருந்தலால்—.........
செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த ஊன்.

(கு - ரை) குளிக்கவரும் முனிவர்களிடம் பயமின்றி மீனினங்கள் பழகிவரும் அன்பினை ஒரு நாரை கண்டு தானும் புலாலுண்ணாது நீரை மட்டும் உட்கொண்டு வந்தது. மதுரையின் பெருமையை முனிவர் தம்முள் பேசிக்கொண்டதை அறிந்து அங்கேசென்று இறைவனை வணங்கி இறுதியில் சிவகணங்களுள் ஒன்றாக முத்தி பெற்றதென்பது திருவிளையாடற் புராணத்திற் கண்ட வரலாறாகும். 42

(பி - ம்) 1 'கொல்லா'

43 வேதியர்கள் விண்ணடைந்தார் வேட்டுயிரைக் கொன்றுதின்னு
ஆதிரைவர் மேலென் றதனை மறுத்—தோதும்
அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

(கு - ரை) வேதியர்கள் வேட்டு விண்ணடைந்தார்; வேட்டு-யாகம் செய்து. விண் அடைந்தார் - அழிதன்மாலையதான சுவர்க்க பதவியையே யடைந்தார். அதனை - யாகத்தில் உயிர்க் கொலை செய்து ஊனுண்பதனை. 'அவிசொரிந்து' என்ற குறள் அதனை மறுத்தோதும் என்க. வேள்விகளால் வரும் பயனினும் ஊனுண்ணா விரதத்தால் வரும்பயனே சிறந்ததென்பது கருத்து. 43

## தவம்

44 அரிதமணர் நீக்கப் பாடியரன் றண்ணளிசேர் மைந்தன்
அமணழிந்துந் தென்னவனை யாக்கும்—இமையளவில்
ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தால் வரும்.

(கு - ரை) அளி - கருணை. மைந்தன் - திருஞான சம்பந்தர். அமண் - சமண மதத்தை. தென்னவனை - மங்கையர்க்கரசியாரின் கணவரான கூன்பாண்டியனை. ஆக்கும் - ஓங்கச் செய்யும். பாண்டியன் சம்பந்தர் அருள்பெற்று முத்திப் பேற்றுக்கு அருகனானதன்றித் தன்னுடற் கூனும் நீங்கப் பெற்றமையால், 'ஆக்கும்' என்பது மிகவும் பொருத்தமுடையதாகும். 44

## கூடா வொழுக்கம்

45 என்று மிறைவ னடியார் பொருளென்று
நின்றெறிந்த மெய்ப்பொருளி னேரான்போய்—அன்று
தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(கு - ரை) மெய்ப்பொருள் - மெய்ப்பொருள் நாயனார். நேரான் - பகைவன்; முத்திநாதன். அடியார் வேடமே மெய்ப்

பொருள் என்று எண்ணிவந்த மெய்ப்பொருளாரை முத்திநாத னென்னும் பகைமன்னன் பலமுறை போரில் வெல்லமுடியாமல் புறக்கிட்டோடினன். இறுதியில் அவன் சிவனடியார்போல் மெய்யெலாம் நீறுபூசி வேணிகள் முடித்துக் கட்டிக் கையினில் படைகரந்த புத்தகக் கவளி யேந்திப் பொய்த்தவ வேடங் கொண்டு புகுந்து தன்னை மெய்ப்பொருளார் வணங்கும்போது அவரை வாளால் குத்திக் கொன்றான் என்பது பெரியபுராணத்திற் கண்ட வரலாறு. 45

## கள்ளாமை

46 ஈசனுக்கும் பெண்டென் றிருந்தாரு மெய்த்திருவை
ஆயர்மனைப் பட்டபா டார்படுவார்—சீச்சியென்
றெள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(கு - ரை) பெண்டென் றிருந்தார் - திருமால்; இந்நூல் 15-ஆம் கவியைக் காண்க. பாடு - துன்பம்; பட்டபாடு கிருஷ்ணாவதாரத்தில். 46

## வாய்மை

47 ஆதிமுடி தேடி யறியா னறிந்தேனென்
றோதிமன நொந்தே யுழல்கின்றான்—வேதனென்றும்
தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(கு - ரை) ஆதி - சிவபெருமான். வேதன் உழல்கின்றான் - கற்பந்தோறும் திருமாலுக்குப் புத்திரராகப் பிறந்தும் கோவி லின்றியும் பிரமா துன்ப முறுகின்றார். 47

48 நந்தியருள் காசிமயா னத்திருந்து சீவித்தார்
அந்த மொழிதவறா தாற்றுமரிச்—சந்திரன்போல்
உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

(கு - ரை) நந்தி - சிவபெருமான்; 171-ஆம் செய்யுளைக் காண்க. காசியில் இறப்பார்க்குச் சிவபெருமான் தாரக மந்திர

முபதேசித்து முத்தி யீவர் என்பதனை உட்கொண்டு, 'நந்தியருள் காசி மயானம்' என்றார்.

ஒவ்வொரு கவியிலும் சிவசம்பந்தமான சொல்லோ, பொருளோ, சொற்பொருளோ இருத்தல் வேண்டுமென்ற கொள்கையுடையவராதல் பற்றி இவ்வாசிரியர் இங்கே 'நந்தியருள் மயானம்' என்றார். காசியில் இறப்பவருக்கு அந்திய காலத்தில் சிவபெருமான் பஞ்சாட்சரத்தை உபதேசிப்பார் என்பர். அரிச்சந்திரன் வரலாறு யாவருமறிந்ததே. 48

## வெகுளாமை

49 பெற்ற முயர்த்தார் பெருமையறி யாதுதக்கன்
செற்றமேற் கொண்டு சிரமிழந்தான்—முற்றும்
சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(கு - ரை) பெற்றம் - காளை. செற்றம் - நெடுங் காலம் நிகழும் சினம். சிரமிழந்தான் - தக்கன். இவன் வரலாறு 10-ஆம் கவியால் விளங்கும். 49

## இன்னா செய்யாமை

50 கண்ணுதலார் தம்மைக் கடைகாக்க வைத்தானை
விண்ணவருந் தாழ்ந்திறைஞ்ச மேல்வைத்தார்—எண்ணின்
இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

(கு-ரை) கடை-கடைவாயில். காக்க வைத்தவன்-வாணசுரன். மேல்வைத்தார்-கைலாயத்தில் தம் சந்நிதியில் மத்தளம் கொட்டு பவனாக வைத்தார். மகாபலி சக்கரவர்த்தியின் புதல்வனாகிய வாணசுரன் சிவபெருமானைப் பூசித்து மிகுந்த வலிமைபெற்று அவரைத் தன் கோட்டைக்குக் காவலாக வைத்து, வலிமையில் தனக்கு ஒப்பார் ஒருவருமில்லை என்று செருக்குற்றிருந்தான். ஒரு சமயம் தன் மகள் உஷையின் காரணமாகக் கண்ணபிரானுடைய பேரன் அநிருத்தன் வாணனூர்க்குக் கொண்டுவரப்பெற அவன் வாணனால் சிறை வைக்கப்பட்டான். இதனை யறிந்த கண்ண

பிரான் வாணனூர் வந்து சிவபிரானை வழிபட்டு உள்ளே நுழைந்து வாணனுடைய ஆயிரங் கைகளுள் சிவனைப் பூசித்து வரும் இரண்டினை வைத்து எஞ்சியவற்றைக் களைந்து மீண்டார். பிறகு வாணன் கயிலையில் சிவபிரானுக்கு மத்தளம் கொட்டும் பணியைப் பூண்டான் என்பது வரலாறு; 92, 134-ஆம் செய்யுட்களையுங் காண்க. 50

51 இரணியனைக் கொன்றிருக்க வெண்ணினவர் கேடும்
அரன்வெகுளப் பின்னிகழு மாற்றால்—ஒருவர்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

(கு - ரை) திருமால் நரசிங்க மூர்த்தியாகத் தோன்றி இரணிய கசிபுவைக் கொன்றபின் தருக்குற்று அட்டகாசம் செய்வதைப் பிரமன் வாயிலாகக் கேள்வியுற்ற சிவபெருமான் எட்டுக் கால்களையும் இரண்டு தலைகளையுமுடைய சரபப்புள்ளாக வந்து நரசிங்கத்தின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டாரென்பது வரலாறு. 51

கொல்லாமை

52 கூடலிறை யன்று கொடியமறை யோன்சுமத்தும்
வேடன்பழி யஞ்சி விடுவிக்கும்—தேடவரும்
நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழு நெறி.

(கு - ரை) கூடல் இறை - மதுரையரசனாகிய பாண்டியன். வேடன் பழி - வேடனுக்கு வந்த பழியை. வழிப் பிரயாணத்தின் இடையில் ஓர் அந்தணன் தன் மனைவியை ஓர் ஆலமரத்தடியில் இருக்கச்செய்து தான் நீர் கொண்டுவரச் சென்றான். அச்சமயம் மரத்தில் சிக்குண்டிருந்த ஓர் அம்பு காற்றினால் அலைப்புண்டு மேலேபட அவள் இறந்தனள்; அந்தணன் இதனை அறியாது அருகிலிருந்த ஒரு வேடனே அவளைக் கொன்றானென்று அவனைப் பாண்டியனிடம் கொண்டுசெல்ல, மன்னவன் உண்மையை அறியாமல் சோமசுந்தரக் கடவுளை வேண்டி அவர் கட்டளையின்படி மறையோனுடன் ஊருக்கு வெளியே நடைபெறும் ஒரு கலியா

ணத்துக்கு மாறுவேடத்துடன் சென்றான். அங்கே மணமகன் உயிரைக் கவர்ந்து செல்ல வந்திருந்த காலதூதர், 'முன்னம் ஆலமரத்தின்கண் சிக்குண்ட அம்பைக் காற்றால் வீழ்த்திப் பார்ப்பனியின் உயிரைக் கொண்டதுபோல் இங்கே கட்டியுள்ள காளையை அவிழ்த்துவிட்டு முட்டச்செய்து இவனுயிரைக் கவர் வோம்' என்று பேசிக்கொண்டதை அறிந்து வேடனை விடுவித் தான் என்பது திருவிளையாடற் புராணத்துப் பழியஞ்சிய திருவிளையா டலிற் கண்ட வரலாறாகும். கொல்லாமையை மேற்கொள்வதே நல்வழியாகும். 52

## நிலையாமை

53 அரனை யருச்சித்த விபசித்திற்கும் வேள்வி
புரிநகுடனுக்கும் போல—வருவதூஉம்
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(கு - ரை) விபசித்து - கோசல தேசத்து ஓர் எளிய அந்த ணன்; சிவபக்தன். ஒரு காலத்தில் குபேரனுடைய தங்கை ஒரு பொய்கையில் நீராடும்போது தன் மூக்குத்தியை இழந்துவிட் டாள். விபசித்து அதனைத் தேடிக்கொடுத்துக் குபேரனால் அளவற்ற திரவியம் பெற்று அவை அனைத்தையும் சிவபணிக்கே செலவிட்டனன் என்பது விருத்தாசல புராணத்திற் கண்ட வரலாறு.

நகுடன்: குருவம்சத்து ஓர் அரசன். இவன் பல பரிவேள்வி களைச் செய்து இந்திர பதவியைப் பெற்றான். இந்திரனானபின் அகத்தியர் முதலிய சப்தரிஷிகள் சிவிகை தாங்க அதில் அமர்ந்து செல்லுகையில் அந்த முனிவர்களை நோக்கி 'விரைந்து செல் லுங்கள்; விரைந்து செல்லுங்கள்' என்ற பொருளைத் தரும்படி வடமொழியில் 'சர்ப்ப, சர்ப்ப' என்றனன். அதனைக்கேட்டு அகத்தியர் சினங்கொண்டு இவனைச் சர்ப்பமாமாறு சபித்தனர் என்பது திருவிளையாடற் புராணத்திற் கண்ட வரலாறாகும். வில்லி பாரதம் குருகுலச் சருக்கம், 14-5 ஆம் கவிகளையுங் காண்க. கூத் தாடும்இடம் ஒரு கூட்டம்கூடி அப்பால் கலைவதுபோல் செல்வம் நிலையற்றதென்பது இவற்றால் விளங்கும். 53

54 முனைநா ளிருந்தகண்ணன் முக்கணாற் காட்டப்பட்ட
வனசரனான் மாய மறுநாள்—எனலால்
நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(கு - ரை) வனசரன் - வேடன். கண்ணபிரான் ஒரு சோலையில் யோகநித்திரை செய்திருக்கையில் மறைவில் நின்ற வேடனொருவன் அவரது காற்பெருவிரலை ஒரு பறவையென்று நினைத்து அம்பு செலுத்த அதுபட்டுக் கண்ணபிரான் இறந்துபட்டாரென்பது வரலாறு. இராமாவதாரத்தில் மறைந்துநின்று அம்பெய்து தன்னைக்கொன்ற திருமாலை வாலி வேடனாகப் பிறந்து கிருஷ்ணாவதாரத்திற் கொன்றான் என்பாருமுண்டு. வாலி பரம சிவபக்தன். இதனை நினைந்து 'முக்கணாற் காட்டப்பட்ட வனசரனால்' என்றார் போலும். சரீரம் அநித்தியமென்பது இதனாற் பெறப்படும். 54

### துறவு

55 குலனொழுக்க நல்ல குணமுண்டோ வென்னும்
அரனருளு முய்யவந்தார்க் கன்றே துறவுமுதிர்ந்
தியானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(கு - ரை) யான் எனது என்னும் மயக்க மற்றவன் முத்தியுலகத்தை யடைவானென்பது கருத்து. உய்யவந்தார் - உய்ய வந்த தேவநாயனார்; சைவசித்தாந்த சாஸ்திரங்களுள் ஒன்றன் ஆசிரியர். முதலிரண்டடிகள் இவர் வரலாற்றைக் குறிக்கும் போலும். 55

56 பட்டினத்துப் பிள்ளை பரனையடைந் தார்துறந்து
விட்டுவிடா விந்திர......கிலார்—கட்டுத்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(கு - ரை) காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் மரபில் சுவேதாரணியர் என்ற பெயருடன் குபேர சம்பத்தில் வாழ்ந்து வந்த ஒருவர் சிவபூசை மேற்கொண்டொழுகி வருநாள், 'காதற்ற

ஊசியும் கடைவழிக்கு வாராது' என்பதை யுணர்ந்து முற்றும் துறந்து சிவபெருமான் விஷயமாகப் பல அரிய நூல்களை இயற்றி இறுதியில் திருவொற்றியூரில் இடைச் சிறுவர்களுடன் கடற்கரையில் விளையாடிக்கொண்டிருக்கையில் தம்மை மணலிற் புதைக்கும்படி அவர்களிடம் கூறி அங்ஙனம் புதைக்கப்பெற்ற இடத்தில் சிவலிங்கமாயினர். முற்றத் துறந்தவர்கள் முத்தி பெறுவர்; துறவாதவர் பிறப்பில் அழுந்துவர் என்னும் நீதியை இவ் வரலாறு காட்டும். 56

57 எங்குமிறை தோய்ந்தாலுந் தோய்விலனென் றோதுதமிழ்ச்
சிங்கநடந்தவழிச் சித்தாந்தம்—அங்கதுகேள்
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(கு - ரை) எங்கும் இறை...என்று - இறைவன் எப்பொருளிலும் வேறின்றிக் கலந்து நிற்பினும் அங்ஙனம் நிற்பவன் அப்பொருள் ஒன்றிலும் பற்றற்றவனாய்த் தனித்து நிற்பவனுமாவான் என்று. முதல் இரண்டு அடிகளும் இந்நூல் முதற் செய்யுளோடு ஒத்திருத்தல் காண்க. பற்று அறும்பொருட்டு முத்தி நெறியைப் பற்றவேண்டும். 57

## மெய்யுணர்தல்

58 மதியிருளை நீங்கின் மலவிருளு நீங்கும்
பதியருளா மென்றுரைவர் பார்த்து—மொழிவ
திருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(கு - ரை) மதி - புத்தி. மல இருள் - ஆணவம் முதலாய மலங்களென்னும் இருள். மொழிவது : எழுவாய். 'இருள்நீங்கி ......காட்சியவர்க்கு' : பயனிலை. மெய்ஞ்ஞானங்கொண்டவர் மெய்ஞ்ஞானத்திலேயே மோக்ஷமடைவர். 58

59 இருள்பலவாக் கோட விறைநூலுங் கன்றி
அருகர் பிறர்க்காகா தென்னும்—உரைகேள்
இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(கு-ரை) இருள்பல ஆவன : ஆணவம், திரோதம், அசுத்த மாயாகாரணம், கன்மம், மாயேயம் என்னும் ஐந்து. மலங்கள் ஐந்தென்பது 'மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற் பொரு மத்துறவே' என்ற திருவாசகத்தாற் பெறப்படும். இந்த ஐந்து மலமும் நீங்கினுலொழியச் சிவனருள் சித்திக்காதென் பதனை, "ஆகமலம் ஐந்தென்பர் ஐந்து மாறு தருளென்பு தரிதென்பர் அறிந்துளோரே" (சிவப்பிரகாசம், 32) என்னும் செய்யுளால் அறிக. 59

60 அரனருளா லின்ப மனுபவிப்பர் வேறென்
றிருமைபரிந் தொன்றை யிகழ்வான்—உரைசெயும்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(கு - ரை) இப்பிறப்பில் உபதேசங்கேட்டு உண்மைப் பொருளை யறிந்தவர் பிறப்பை நீக்குவர் என்பது கருத்து. இருமை - ஆண்டானடிமைத்திறம். ஒன்று-ஏகம். இருமையில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் உடையவர் சைவ சித்தாந்திகள். 60

61 பற்றொழிந்து மென்னபிறர் பண்டரனைத் தூதுவிடக்
கற்றவர்போன் மெய்ப்பொருளைக் கண்டார்சொல்-உற்றதுகேள்
ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(கு-ரை) தூதுவிடக் கற்றவர்-சுந்தரமூர்த்தி நாயனார். சுந்தர மூர்த்திகள் சங்கிலியார்பால் உறவு வைத்திருந்தமையை எண்ணிப் பரவையார் ஊடல் கொண்டனர். அதனை மாற்றிச் சுந்தரரை அவரிடம் சேர்ப்பிக்கச் சிவபெருமான் பரவையார் இல்லத்துக்கு இருமுறை தூது சென்ற வரலாறு **பெரிய புராணத்தால்** அறியப்படும். மெய்ப் பொருள் – உண்மை யறிவு, சிவஞானம். 61

## அவாவறுத்தல்

62 பிறவியறுர் மற்றையவர் பின்றுகர்காண் பித்து
பலபொருளும் வேண்டாத பண்பி னவான்றி

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக வற்ற திலர்.

(கு—ரை) பிஞ்ஞகர்[1] – சிவ பெருமான். பண்பின் அவர் – திருநாவுக்கரசுநாயனார். இவர் திருப்புகலூரில் உழவாரப் பணி செய்கையில் சிவபெருமான் உழவாரம் நுழைந்த இடமெங்கும் பொன்னோடு நவமணிகள் பொலிந்திலங்க அருளினர். அப்பரோ அவற்றிற் சிறிதும் பற்றற்றவராகிப் பருக்கைக் கற்களாக மதித்து உழவாரத்தினில் ஏந்தி அருகேயுள்ள ஒரு வாவியில் போட்டு விட்டனர். பிறகு சிவபிரான் தேவமாதரை ஏவி இவரை மயக்க நினைத்தபோதும் அடிகள் மனம் மாறினாரில்லை. பிறவியற்றவர் என்பார் ஆசையற்றவர். 62

ஊழ்

63 வரருசியுள் விட்டார் மயங்கினா ரென்றால்
அவரவருக் கீச னமைத்த திறனன்றி
வைப்பிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(கு-ரை) வரருசி - இவர் திருக்கைலாயத்தில் சிவபெருமானுக்குப் பணியாற்றி வந்த புஷ்ப தந்தன் என்பாரின் அவதார புருஷர். இலக்கணத்தில் தாமே நிரர் என்று மமதை கொண்டு இவரோடு ஒரு குருவினிடம் பயின்ற பாணினி முனிவரை அறிவற்றவர் என்று நிந்தனை செய்தார். சிவபக்தரான பாணினி பிறகு தவஞ்செய்து பாணினீயம் என்னும் வடமொழி வியாகரணத்தை எழுதினார். பின்பு வரருசி அதனையே கற்றுப் பூர்ணமான புலமை பெற்று விளங்கினார். சிவகணத்துள் ஒருவராயிருந்தும், மிகுந்த புலவராக இருந்தும் பரநிந்தனை செய்தமையின் 'மயங்கினார்' என்றார். 63

துறவறவியல் முற்றும்

அறத்துப்பால் முற்றும்

---

1. பிஞ்ஞகர் : (தலைக்கோலமுடையவர்) காரணப்பெயர்.

# 2. பொருட் பால்

## அரசியல்

### இறைமாட்சி

64 இறையெளிநின் றியார்க்கு மினியசொல் லாலே
மதுரை மதுரையென் பார் மாந்தர்—அதுவன்றே
காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்.

(கு-ரை) இறை—சோம சுந்தரக் கடவுளின் அவதாரமாகிய சுந்தர பாண்டியர். எளி நின்று-முறை வேண்டினோர்க்கும் குறை வேண்டினோர்க்கும் காண்டற்கு எளியராக நின்று காட்சியளித்து. மாந்தர் மதுரையைப் புகழ்வதற்குக் காரணம் சுந்தரமாறனுருடைய செங்கோன்மையே என்பது கருத்து. 1

### கல்வி

65 அருகர்கழு வேறுதலா லன்னெறிவிட் டீசர்
திருவருளால் வாதவூர் சேரும்—குருநெறியிற்
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

(கு-ரை) அல் நெறி – சித்தாந்த நெறியல்லாத புறச்சமய நெறி. வாதவூர் சேரும் குரு—மாணிக்கவாசகர். இவர் கற்றவை சிவஞானபோத முதலிய சைவ நூல்கள். 2

66 நாதரருள் சேரனொடு நம்பியா ரூரருமுன்
பேதமறக் கூடிப் பிரிவதுபோல்—நீதின்
றுவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

(கு-ரை) சேரமான் பெருமாணயனார் சிவபூசை செய்து வரும்போது ஒருநாள் இறைவனால் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பற்றிக் கேள்வியுற்றுச் சோழநாடு சென்று சுந்தரரைக் கண்டு அவருடன் நட்புப் பூண்டனர். இருவரும் பின்னர் இன்ப

வெள்ளத்திடை நீந்தி ஏறமாட்டாதவர்போல என்பும் உருக உயிர் ஒன்றித் தம்முள் கலந்தனர். பல சமயங்களில் இவ்விருவரும் கூடும்போது அன்போடு கூடியும் பிரியும்போது அரிதிற் பிரிந்தும் தாம் ஒருவரில் ஒருவர் கலந்துள்ளமையைப் புலப்படுத்தினார்கள் என்பது பெரியபுராணத்திற் கண்ட வரலாறாகும். 3

67 கற்றவர்பாங் கத்திருந்தார் கண்ணுதலோ டேனையவர்
சுற்றுமிலா ரென்று தலையாயார்—முற்றும்
உடையார்முன் இல்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(கு - ரை) கற்றவர் - சங்கப் புலவர்கள். கண்ணுதலோடு - சங்கப் புலவருள் ஒருவராக உடன் வீற்றிருந்த திருவாலவாய் எம் அண்ணலோடு. ஏனையவர் - கல்வி யறிவில்லாதவர்கள். என்று - என்று நினைத்து. முற்றும்...கற்றார் தலையாயார். 4

68 சிவகீதை முற்கேட்டார் பின்றுசென்று சென்மித்
தவர்பார்த் தனுக்கருளு மாற்றால்—புவனத்
தொருவனைக் கேட்டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(கு - ரை) சிவபெருமான் திருமாலுக்கு உபதேசித்த கீதை சிவகீதையாம். முன் கேட்டார் - திருமால். சென்மித்து - பல பிறவிகளிலும் பிறந்து. பார்த்தன் - அர்ச்சுனன். திருமால் அர்ச்சுனனுக்கு உபதேசித்தது பகவத்கீதை எனப்படும். 5

69 இறைவருங் கைவிடா ரேடவர்பாற் சென்று
பிறருமறிந் தின்பம் பெறலால்—அறிஞரும்
தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(கு - ரை) இறைவர் - சிவபெருமான். திருப்பெருந்துறையில் திருவாதவூரருக்குக் காட்சியளித்தபோது சிவபெருமான் தம் கையில் சிவஞானபோதச் சுவடியை வைத்திருந்தார் என்ற செய்தியை உளத்திற்கொண்டு, 'இறைவரும் கைவிடார் ஏடு'

என்றுர். பிறரும் என்றது திருவாதவூரரை உள்ளிட்ட மாணவர் குழாத்தினரை. 6

கல்லாமை

70 ஒருவர் சிறிது......னுமையாற்
கருள்வதன்முன் ப...தறிந்து—குருமுகத்தாற்
கல்லாதா னொட்பங் கழியநன் ருயினும்
கொள்ளா ரறிவுடை யார்.

(கு - ரை) கல்லாதவன் தன்னை மதிக்கும் மதிப்பு கற்றவன் முன் பேசக்கெடும். இக்கவியில் முதலிரண்டடிகளின் சரியான உருவம் விளங்கவில்லை. 7

71 ஈச ரிடத்தன்ப ரென்பவர்பாற் புத்தரெலாம்
பேசுமிடத் தூமையாம் பெற்றிமையால் ஆகமத்தைக்
கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

(கு - ரை) ஈசரிடத்தன்பர் - **மாணிக்க வாசகர்.** புத்தர் - இலங்கையிலிருந்து வந்த புத்தர்கள். மணிவாசகனுர் சிதம்பரத்திலிருக்கையில் இலங்கையிலிருந்து சில பௌத்தர்கள் வந்து தில்லை மூவாயிரவருடன் வாதஞ் செய்தனர். ஏழுநாளில் வாதம் முடிவுபெற நினைந்து சிவபெருமான் தில்லைவாழந்தணர் தம் கனவிற்ருேன்றி, 'வாதவூரனை அழைத்து வாதம்புரியச் செய்யுங்கள்' என்று கட்டளையிட்டார். அவர்கள் அழைப்புக்கிணங்கி மணிவாசகனுர் பௌத்தருடன் வாதிட்டபோது அவர்கள் மறுமொழி பகரமுடியாது திகைத்தனர். அவ்வளவில் ஈழநாட்டரசன் தன் மூங்கைப் பெண்ணை அழைத்து, ' இருதிறத்தாரில் இப்பெண்ணின் மூங்கையைத் தீர்ப்பவரின் சமயமே சிறந்ததாகும் ' என்ருன். பௌத்தர் மூங்கையைப் போக்க அறியாது வருந்த மாணிக்க வாசகர் அப்பெண்ணைப் பேசவைத்து ஈழமன்னனைச் சைவராக்கினுர் என்பது **திருவாதவூரடிகள் புராணத்திற்** கண்ட வரலாருகும். 8

## கேள்வி

72 ஆலடியார் பாற்பட்ட வந்தணர்போ லுய்வதற்குச்
சிலமுடை யாற்பாற் செவிதாழ்க்க—சால
இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

(கு - ரை) ஆலடியார் - ஆலமரத்தினடியிலுள்ள தக்ஷிணா மூர்த்தி. அந்தணர் - சனகாதி நால்வர். நல்லவர்கள் வாயிற் பிறக்கும் சொல் ஒருவர்க்கு ஆபத்து வரும்போது ஊன்றுகோல் போலாம் 9

## அறிவுடைமை

73 பிறர்க்குண்டோ வில்லையவர் பேராண்மை குன்ற
மதிக்கண் நுழைமதனை மாய்த்தார் தமக்கே
அறிவற்றாங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண்.

(கு - ரை) குன்ற - அறிவு முதலியன அனைத்தும் குறையும்படி. மதிக்கண் நுழை மதனை - புத்தியில் நுழைகின்ற மன்மதனை; மதனை என்பதற்கு அறியாமை எனினும் அமையும்.

‘புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம்’ (தனிப்பாடல்)

‘விழித்த கண்குருடாத்திரி வீரரும் பலரால்’ (திருவிளையாடல்)

மாய்த்தார் தமக்கே என்பதனோடு பேராண்மையைக் கூட்டுக. 10

74 ஈசனெறி தொண்ட ரியம்புதலு மெய்ந்நெறியென்
றுசின்று தேவ ரடைந்ததூஉம் நீதியன்றே
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(கு - ரை) ஈசன்னெறி - சிவஞான போதம். தொண்டர் - பரஞ்சோதி முனிவர். தேவர் - மெய்கண்ட தேவர். சிவஞானபோத மென்னும் வடமொழி நூல் சிவபெருமானிடமிருந்து திருநந்தி தேவருக்கும் அவரிடமிருந்து சனற்குமாரருக்கும் அவரிடமிருந்து சத்தியஞான தரிசினிகளுக்கும் அவரிடமிருந்து பரஞ்சோதி

முனிவர் என்பவருக்கும் 12 சூத்திரங்களாக உபதேசிக்கப்பட்டது. இவர்களுள் பரஞ்சோதி முனிவர் பூலோகம் வந்து திருவெண்ணெய் நல்லூரில் சைவ வேளாளர் குலத்திற் பிறந்து குழந்தைப் பருவத்தில் இருந்த மெய்கண்ட தேவரைக் கண்டு அவருக்குச் சிவதீட்சை செய்து இதனை உபதேசித்தார். அதனைக் கொண்டு மெய்கண்டார் தமிழில் சிவஞான போதத்தை 12 சூத்திரங்களாக எழுதினுர் என்பது வரலாறு. 11

75 பண்டு களிற்றுப் படிமருங்கு வைத்தசெழுந்
தண்டமிழை யம்பலவர் தாமகிழ்ந்து—கொண்டமையால்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(கு—ரை) தண்டமிழ்- திருக்களிற்றுப் படியார் என்ற புத்தகம். உய்யவந்தார் ஒரு நூலை எழுதி அது சிவசம்மதமானதோவென்று அறியும் பொருட்டுச் சிதம்பரத்திற் கோயிலின் திருக்களிற்றுப் படியில் வைக்க, அப் படி மருங்கிலுள்ள கல்யானை அதனைத் தன் துதிக்கையால் எடுத்துக் கடவுள் திருமுன்வைத்து அதன் மகிமையைப் புலப்படுத்தியது. இதனுல் அந்நூலுக்குத் திருக்களிற்றுப் படியார் என்ற பெயர் போந்தது. 12

## குற்றங் கடிதல்

76 தோன்றி யிறையருளுந் தொண்டரெனு மூர்த்திக்கு
மூன்றுமறைச் செல்வ முதிருமஞ்—ஞான்று
செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

(கு—ரை) இறை அருளும் மூர்த்திக்கு - சிவபெருமான் அருள் செய்த மூர்த்தி நாயனுருக்கு. மூன்று மறைச் செல்வம் : சிவாகமங்களிற் கூறப்பட்ட மூன்ருகிய திருநீறு, உருத்திராக்கக் கலன், சடைமுடி. அஞ்ஞான்று – அந்நாளில். மூர்த்தி நாயனுரின் சிவத்தொண்டுக்கு இடையூறு விளைத்துவந்த மதுரையை ஆண்டுவந்த கருநாடக மன்னன் அது காரணமாக இறந்துபட்டான். பிறகு ஊர் மக்கள் யானையை அனுப்பி மூர்த்தி நாயனுரைத்

தம் மன்னராகக் கொண்டனர். அவர் சிவபெருமானை வேண்டித் திருநீறே அபிடேகமாகவும், உருத்திராக்கமே திருவாபரணங்களாகவும், சடைமுடியே மணிமுடியாகவுங் கொண்டு அரசுரிமையை ஏற்றுக்கொண்டார் என்பது வரலாறு. 13

## பெரியாரைத் துணைக்கோடல்

77 பகைசிறிது மின்றிப் பறவைகளு மஞ்ச
இறைவர் துணைவலியா னெய்தும்—முறைமையால்
உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(கு-ரை) வலியான் - கரிக்குருவி, பல பறவைகள் வருத்த வருந்திய கரிக்குருவி யொன்று மதுரையில் வைபவத்தைக் கேள்வியுற்று அங்கே சென்று பொற்றாமரையிற் படிந்து, சிவபெருமானைச் சில பகல் போற்றி வந்ததனால் வலியான் என்ற பேரைத் தனக்கு மட்டுமன்றித் தன் மரபுக்கே பெற்று இறுதியில் சிவகதி சார்ந்ததென்பது திருவிளையாடற் புராணத்திற் கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்த படலத்தால் தெரியும் வரலாறாகும். 14

78 சிந்தா மணிவிடைத்தென் தென்னற் கிறையருளால்
வந்தாரைப் போலவெது வாழ்விக்கும்—அந்தோ
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(கு-ரை) என் – என்ன பயன்? தென்னன் - கூன் பாண்டியன்; இறையருளால் வந்தார்–திருஞான சம்பந்தர். வாழ்வித்தல்: கூனை நிமிர்த்தல். 15

## சிற்றினஞ் சேராமை

79 குண்டராற் றென்னன் குறைப்பட்டுக் கண்ணுதலார்
தொண்டரான் மிக்குயர்ந்து தோன்றலால்- எண்டிசையும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.

(கு-ரை) குண்டர் - சமணர். தென்னன் - கூன்பாண்டியன். தொண்டர் – திருஞான சம்பந்தர். பாண்டியன் முன்னிலை

யில் சமணருக்கும் சம்பந்தருக்கும் நிகழ்ந்த சமயவாதத்தைப் பற்றியது இது. 16

## தெரிந்து செயல்வகை

80 ஆய்தொடியார் கண்ணுதல்பா லன்பி னுமிழ்தலுமே
வாய்மையறி யாதொழுகு மற்றவர்போல்- தூய்மையொடு
நன்றுற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றுக் கடை.

(கு—ரை) ஆய் தொடியார் - திருநீலநக்க நாயனாரின் மனைவியார். உண்மையறியாது தம் மனைவியைக் கண்டித்தவர் திருநீலநக்கர். திருநீலநக்கர் தம்மனைவியுடன் கோவிலுக்குச் சென்று பரமனை வழிபடுங்கால், ஒரு சிலம்பி சுவாமியின்மேல் விழுதல் கண்ட அவர் மனைவியார் அதனைத் தம் வாயால் ஊதி விலக்கினார். இச் செயலை அனுசிதமென்று கருதிய கணவனார் மனைவியாரை நீத்தார். அன்றிரவு சிவபெருமான் நாயனார் கனவிற்றோன்றி, 'உம் மனைவி ஊதிய பாகம் போக மற்ற இடங்களில் என்னுடலில் இதோபார் கொப்புளங்கள்' என்று காட்டி அவருடைய மனைவியாரின் தலையன்மைப் புலப்படுத்தினார் என்பது **பெரிய புராணத்திற்** கண்ட வரலாகும். தம் மனைவியை இவர் கண்டித்தமை உலக இயல்புக்கு ஒத்ததேனும் அது தவறென்பது இவ் வரலாற்றால் விளங்கும். 17

## வலியறிதல்

81 கண்ணுதல்பாற் சென்றது காமனுக்கு வென்றியோ
எண்ணமிலான் போலு மெதிர்ந்திறந்தான்—நண்ணி
நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

(கு—ரை) நுனிக் கொம்பேறினார் அவ்வளவைக் கடந்தால் உயிரை இழப்பர். தபஸ்வியாயிருந்த சிவபெருமானுடைய நிஷ்டையைத் தேவர்கள் விரும்பியபடி கலைக்கும் பொருட்டு மலரம் பெய்த **மன்மதன்** அவராலெரிக்கப்பட்டானென்பது வரலாறு. 18

## கால மறிதல்

82 எல்லா மிமைப்பி லழிப்பாரு நீட்டித்தார்
வல்லார் புரமெரிக்க வந்துழியும்—இல்லாரைப்
பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

(கு-ரை) அழிப்பார் - சிவபெருமான். வல்லார் – பிரமா விஷ்ணு முதலியோர். இல்லார் – பகைவர். இதில் கண்ட வரலாறு திரிபுர சங்காரத்தைக் குறிக்கும். 19

## இடனறிதல்

83 இறையருள் தென்னனிடத் திந்திரன்வந் தன்று
வளையா லெறிபட்ட வாற்றால்—இளையாச்
சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுப்படையான்
ஊக்க மழிந்து விடும்.

(கு—ரை) இறையருள் தென்னன் : 78-ஆம் கவியைப்பார்க்க. பாண்டியன் தளையிட்டு வைத்த மேகங்களை விடுவிக்க வந்த இந்திரன் பாண்டியனோடு செய்த போரில் மீனவன் இந்திரன் முடிமேல் வளை (சக்கரம்) ஒன்று எறிந்து அவனைப் புறங்காட்டி ஓடச் செய்தானென்பது வரலாறு. 20

## தெரிந்து தெளிதல்

84 இறைவர்நிலை காணா ரிருவரென் று கண்டால்
பெருமை சிறுமையினிப் பேசும் இறையாம்
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தந்தம்
கருமமே கட்டளைக் கல்.

(கு—ரை) இருவர் – பிரமனும் திருமாலும். இருவரும் சிவ பெருமானுடைய அடி முடி தேடிய வரலாறு இங்கே குறிக்கப் பட்டது. 21

## தெரிந்து வினையாடல்

85 ஈசன்குண் டோதரபோ வென்றருளுங் குன்றுபுரை
சோறுகறி யுண்டு தொலைப்பதற்கு நாடி
இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றுய்ந்
ததனை யவன்கண் விடல்

(கு—ரை) 'குன்றுபுரை சோறுகறி யுண்டு தொலைப்பதற்குக் குண்டோதரபோ என்று ஈசன் அருளும்' என்று கூட்டுக. ஈசன் குண்டோதரனைப் போவென்ற வரலாறு திருவிளையாடற் புராணம், குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலத்தில் உள்ளது. 22

## சுற்றம் தழால்

86 அத்தர் திருவருளா லன்றுபடிக் காசுபெற்றூர்
பத்தர்கணஞ் சூழப் பரிந்திட்டார்—இத்தலத்துச்
சுற்றத்தார் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(கு—ரை) பெற்றூர் : திருஞான சம்பந்தரும் அப்பரும்; எழுவாய். இப்பாட்டிற்கண்ட வரலாற்றை 25ஆம் கவியின் குறிப்புரையிற் காணலாம். 23

## பொச்சாவாமை

87 மறந்துமறந் தீசன் மலரடியைப் பேணு
திறந்திறந்து மாலுமிட ரெய்தும்—அறிந்தறிந்து
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(கு—ரை) திருமால் தசாவதாரங்கள் எடுத்தமையை நினைந்து 'பிறந்து பிறந்து மாலும் இடர் எய்தும்' என்றூர். 24

## செங்கோன்மை

88 இறைமகிழ வேந்த னிளங்கன்றிற் காக
மகவினையுந் தேரூரு மாற்றூல்—அகலிடத்தில்

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(கு—ரை) இறை — சிவபெருமான். வேந்தன் — மனுநீதிச் சோழன். தன் மகனுடைய தேர்க்காலில் அகப்பட்டு இறந்த ஒரு கன்றின் தாய்ப்பசுவுக்கு நீதி வழங்கும் பொருட்டுத் தானே அம் மகன் மீது தேரைச் செலுத்திய மனுநீதிச் சோழ மன்னனுடைய செங்கோன்மையைத் தெரிவிக்கும் வரலாறு இது. பெரியபுராணம் திருவாரூர்ச் சருக்கத்திற்* காண்க. 25

89 அந்திவண்ண ரருளா லருகர்பிறர் கோள்சிதைய
வந்ததிரு வள்ளுவர்நம் வாய்மொழிகேள்—இந்நிலத்
தந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(கு—ரை) அந்தி வண்ணர் - சிவபெருமான். பிறர் என்றது உலகாயதரையும் பௌத்தரையும். சிதைய வந்த—சிதையும்படி அதற்குப் பிரமாணமாக வந்த. அந்தணர் நூலையும் அறத்தையும் திருவள்ளுவர் இக்குறளிற் கூறியிருப்பதனால் புறச்சமயிகளின் கோட்பாட்டை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை யென்பது புலனாகும். 26

கொடுங்கோன்மை

90 மாமனென் றும் பாணனென் றும் வந்தானைப் பொன்மதுரைச்
சேவகனென் றுந் திரியாத சூரனென் றும்
நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும்.

(கு—ரை) சேவகன் - வீரன். சூரன் என்பதும் அது. மாமனாகவும் பாணனாகவும் வந்தவன் வீரசூர பராக்கிரமம் பொருந்திய சிவபிரான் என்று அறிந்து நாடி முறைசெய்யா மன்னவன் நாடு கெடும். அரசன் கொடுங்கோலனாயின் கடவுள் தாமே வந்து முறை செய்வர். இக்கவியில் திருவிளையாடற் புராணத்துள்ள 'மாமனாகவந்து வழக்குரைத்த படலம்', 'விறகு விற்ற படலம்' என்னும் இரண்டின் செய்திகள் சுட்டப்பெற்றுள்ளன.

* திருநகரச் சிறப்பு.

தனபதி என்னும் வணிகனொருவன் தன் சொத்துக்களை யெல்லாம் தன் மருகனை அனுபவிக்கும்படி விட்டுச் செல்லவே பின்னாளில் அவன் தாயாதிகள் அவற்றைக் கவர்ந்துகொண்டனர். அப்போது சிவபெருமான் தனபதியாக வந்து நீதி மன்றத்தில் வழக்காடி அவன் சொத்துக்களை அம் மருகனுக்கு உரிமையாக்கிச் சென்றார் என்பது வரலாறு.

பாணனாக வந்தது இசைவாது வென்ற திருவிளையாடலால் அறியப்படும்; திருவால. 57 : 24. 27

வெருவந்த செய்யாமை

91 இசைபயின்றார் வாதத் திறைவருமொன் றேனும்
இசைவன்றி......வியற்றான்—இசைவொன்றத்
தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து.

(கு–ரை) முதலிரண்டடிகளின் உண்மை உருவம் புலப்படவில்லை. இக்கவியிற் குறிப்பித்த வரலாறு திருவிளையாடற் புராணத்துள் இசைவாது வென்ற படலத்துள் கண்டது போலுமென்று தோற்றுகிறது. 28

கண்ணோட்டம்

92 வாண னிருகரமும் வைத்துப் பணிகருதி
நாதனறுப் பித்தருளு நன்னயத்தைப்–போலக்
கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(கு–ரை) கண்ணோட்டமுடைய அரசர்க்கு உரியது இவ்வுலகம். இதிற் கண்ட வரலாற்றை 50-ஆம் கவியின் குறிப்புரையிற் காண்க. இச்செய்தி 134-ஆம் கவியிலும் உள்ளது. 29

ஒற்றாடல்

93 சீர்படைத்த முக்கட் சிவனன்ப னென்றெழுதும்
பேர்படைத்த சேரர் பெருமான்போல்—பார்மிசையின்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(கு--ரை) சேரர் பெருமான் சேரமான் பெருமாணாயனார். பாணபத்திரருடைய வறுமையைத் தீர்த்தற் பொருட்டுச் சிவபெருமான் சேரமான் பெருமாணாயனாருக்கு எழுதிய திருமுகப்பாசுரம் வருமாறு: 'மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவு பானிற வரிச்சிற, கன்னம் பயில்பொழி லால வாயின், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம், பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ், குருமா மதிபுரை குலவிய 'குடைக்கீழ்ச், செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க, பண்பா லியாழ்பயில் பாணபத்திரன், தன்போ லென்பா லன்பன் றன்பாற், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே,' இதனைக் கொண்டு சென்ற பாணபத்திரரைச் சேரர் பல உபசாரங்களுடன் வரவேற்று அவர் விரும்பிய பொருளைக் கொடுத்து அனுப்பினார் என்பது வரலாறு. பத்திரருடைய மற்றொரு வரலாறு 90-ஆம் கவியால் விளங்கும். 30

## ஊக்க முடைமை

94 பார்த்த குரவர் பணிமுயன்றார் கண்ணுதலார்
தீர்த்தத் தியலுந் திறமின்றார்—நீர்த்தடத்து
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

(கு ரை) பார்த்த குரவர் பிறவிக் குருடராயிருந்து பின் சிவபெருமான் அருளால் கண்பெற்று பெரியவராகிய தண்டியடிகள் நாயனார். தண்டியடிகள் திருவாரூரில் திருக்குளத்தை அகலப்படுத்த முயன்றபோது சமணர்கள் இடையூறு செய்யவே பரமசிவனருளால் இடையூறு நீங்கி நாயனாருடைய முயற்சி நிறைவேறியது. இதுவே முதலிரண்டடிகளிற் கண்ட வரலாறு. பெரிய புராணத்திற் கண்டது இது. 31

95 மேனிகழ்வ தேதெனினும் வெற்றியெனத் தென்மதுரை
ஈசனொடு வாதத் தெதிர்நின்ற கீரனைப்போல்
உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(கு—ரை) தருமியின் பொருட்டு வாதுக்கு வந்த சிவபிரானிடம் 'நெற்றிக் கண்ணைக் கொண்டு என்னை வெருட்டல் வேண்டாம்; யான் இதற்குத் தோற்றிலன்' என்று நக்கீரர் கூறியதை ஆசிரியர் முன்னிரண்டடிகளிற் குறிக்கின்றார். 34-ஆங் கவியின் குறிப்புரையையும் பார்க்க. உள்ளல்—நினைக்கக்கடவர். 32

மடியின்மை

96 கஞ்சுகநா தன்கோயிற் காலெலிக்கு மாட்டாதே
வஞ்சனைசெய் தானையிவண் வைத்துப்பார் —துஞ்சு
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு.

(கு—ரை) கஞ்சுகம் – சட்டை ; கஞ்சுகநாதன் – சட்டைநாதர்; சீகாழியில் உள்ள சிவபெருமான். கால் - வளை. இதிற் கூறப்பட்ட எலி சிவபெருமான் அருளால் மாவலியென்னும் அசுரனாகப் பிறந்து இப்பூவுலகை யாண்டது. பிறகு ஒரு சமயம் மாவலியிடம் மகாவிஷ்ணு வஞ்சனையாகக்குறள் வடிவங்கொண்டு மூன்றடி மண் யாசித்து அவனை அழித்தனர். 22-ஆங் கவியைப் பார்க்க. காலெலி என்ற நிந்தையால் மாவலிக்கு உயர்வு தோன்றிற்று. இது சீகாழித்தல புராணத்திற் கண்ட வரலாறு. இதனாற் சோம்ப லில்லாதான் அடையும் பயனை அறிந்து கொள்ளலாம், 33

97 மாற னிறையருளால் வந்துவெல்லத் தோற்றுளவில்
போர்விண்ட விந்திரனைப் போலவே—சால
இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

(கு—ரை) மாறன் - உக்கிர குமார பாண்டியன். உக்கிர குமார பாண்டியன் வாருடு சென்றிருந்த போது தனக்குச் சமானமாக உக்கிரன் நடந்து கொண்டமையை இந்திரன் கண்டு சினங்கொண்டு பாண்டி நாட்டில் மழை பெய்யா வண்ணம் மேகங்களுக்கு உத்தரவிடவே, பாண்டி நாட்டின் மலைகளில் தங்கிய மேகங்களை உக்கிரன் தளையிட்டனன்; இந்திரன் அவற்றை விடு

விக்கும்பொருட்டு உக்கிரனுடன் போருக்கு வந்து மகுடபங்க மடைந்து முதுகிட் டோடினான் என்பது திருவிளையாடற் புராணம், இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலத்தின் வரலாறாகும். இவ் வரலாற்றின் முற்பகுதி 144-ஆம் கவியில் விளக்கமாக உள்ளது. 34

### ஆள்வினை யுடைமை

98 பாலனொருவன் பணிந்துகட வூரனைக்
காலற் கடந்திருக்கக் கண்டோமே—ஞாலத்தின்
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(கு-ரை) விடாமுயற்சியால் விதியையும் கடக்கலாம். பாலன் - மார்க்கண்டன். கடவூரரன் - திருக்கடவூரிலுள்ள சிவபெருமான். காலற் கடந்து - யமனை வென்று. மார்க்கண்டேயர் பொருட்டு அரன் யமனைச் சங்கரித்தது யாவரும் அறிந்ததே. 35

### இடுக்க ணழியாமை

99 நக்கர் சிறிது நகைத்தலு முப்புரமும்
அக்கணமே வெந்துவிழு மாதலால்—மிக்க
இடுக்கண் வருங்கா னகுக வதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(கு-ரை) நக்கர் - நிர்வாணர்; சிவபிரான் என்றபடி. சிவபெருமான் புரங்களை அழித்தமை, சிரித்தும் விழித்தும் அம்பெய்தும் எரித்தார் என்று மூன்று விதமாக வழங்கும். துன்பம் வருங்காலத்தும் பொறுமையுடன் இருக்கவேண்டும். 36

அரசியல் முற்றும்

## அங்கவியல்

### அமைச்சு

100 தென்ன னிறைவரருள் சேர்ந்துசெங் கோல்செலுத்த
மன்னு குலச்சிறையே மந்திரியாம்—என்னை

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை.

(கு-ரை) தென்னன் - நெடுமாறன் என்ற பாண்டியன். இவனுடைய வரலாறு 44, 79-ஆம் கவிகளாலும் விளங்கும். 37

சொல்வன்மை

101 சிவனடி யென்னுமயன் சீர்பெறுமுன் பின்னர்ச்
சிவசமதை சொல்லலும் சீர்போம்—எவருந்தம்
ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(கு - ரை) முருகவேளின் சிறையிலிருந்து அயனைச் சிவபெருமான் விடுதலை செய்வித்ததை எண்ணி, 'சீர்பெறும்' என்றார். 'சீர் போம்' என்றது தலைகளிலொன்றை யிழந்ததைக் குறிக்கும். 38

102 பரமனருள் வேண்டிப் பகர்ந்தசுர ரான
கரதூட ணன்முதலோர் காதை—வரவறிவீர்
ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(கு - ரை) செல்வமும் கேடும் சொல்லால் வருதலால் சொற் சோர்வு வராமற் காக்கவேண்டும். கரதூடணர்களைப் பற்றிய வரலாறு இது; விளங்கவில்லை. 39

103 எவற்றினுமே லென்னவிறை வர்சொன்ன தெல்லாம்
சிவப்பிரகா சத்துடங்கச் செப்பும்—தவத்தினர்போல்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து.

(கு - ரை) இறைவர் சொன்னதெல்லாம் - உமாமகேசுவரர் சொன்ன ஆகமத்தின் பொருளை யெல்லாம்; வேதம் பொதுவும் ஆகமம் சிறப்பும் ஆதல்நோக்கி, 'எவற்றினும் மேலென்ன' என்றார். தவத்தினர் - கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார்.

மெய்கண்ட தேவர் சிவஞான போதத்தைத் தமிழில் 12 சூத்திரங்களாக வகுத்தருளினார். அவர் மாணாக்கரான அருணந்தி

தேவர் அந் நூலின் பொருளை விளக்கி, சிவஞான சித்தியார் என்றொரு நூலை வழிநூலாகச் செய்தருளினார்; இவ்விரு நூல்களும் அறிஞர்க்கேயன்றி மற்றவர்க்கு எளிதில் பொருள்படாமையை எண்ணிக் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் இவ்விரு நூற் பொருளும் சிவாகமப் பொருளும் விளங்கும்படி நூறு திருவிருத்தங்களால் சிவப்பிரகாசம் என்றொரு நூலை இயற்றியமைத்தார். சிவஞானபோதம் பூவுலகில் பரவிய வரலாறு 74-ஆம் கவியின் குறிப்புரையால் தெரியவரும். 40

## வினைத் தூய்மை

104 சூரனிழந் தானிழந்தான் சோதியரு ளுந்தாய
னாரிழந்த வெல்லா மடையுமே—தேரின்
அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(கு - ரை) சூரன் - முருகப்பெருமானால் சங்காரஞ் செய்யப்பட்டவன். தாயனார் - அரிவாட்டாய நாயனார். சோழ நாட்டில் கணமங்கலம் என்ற ஊரில் வேளாளர் மரபில் தாயனார் என்றோர் அடியார் இருந்தார். அவர் சிவபெருமானுக்கு நல்ல அரிசியையும் கீரை,மாவடு இவற்றையும் படைத்து வழிபட்டு வந்தார். ஒருநாள் வழக்கம்போல் இவர் இப்பொருள்களைக் கூடையில் ஏந்திக் கோவிலுக்குச் செல்லும் வழியில் பசியின் களைப்பால் காலிடறவே கூடையிலிருந்த பொருளெல்லாம் நிலப்பிளவில் விழுந்துபோயின. 'எம்பெருமான் அமுது செய்யும்பேறு இன்று கிடைத்திலதே' என்ற வருத்தத்தால் அவர்தம் ஊட்டியை அறுக்கத் தொடங்கும் சமயம் அந்தப் பிளவிலிருந்து அவரைத் தடுக்கச் சிவபெருமானது கையும் மாவடுவைக் கடிக்கும் விடேல் விடேல் என்ற ஓசையும் எழுந்தன. பிறகு அந் நாயனார் தம் மனைவியாருடன் பெறுதற்கரிய பேற்றைப் பெற்றார் என்பது வரலாறு. நிலப்பிளவிற் போகட்டு இழந்தவற்றைச் சிவபெருமான் அமுது செய்ததனால் இழந்த வெல்லாம் அடையுமே என்றார். 41

## வினைத் திட்பம்

105 தோழனென்று சொன்னவடித் தொண்டர்க் கிறைவர்தூ
தாக நடந்த தரிதரிது காதலிபாற்
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்.

(கு - ரை) தம்பிரான் தோழர் என்பது சுந்தரமூர்த்தி நாயனுருக்கு ஒரு பெயர்; 30. 'காதலிபால் தூதாக நடந்தது' என்று கூட்டுக; 61-ஆம் செய்யுளின் குறிப்புரை பார்க்க. 42

106 குறுமுனியு மீசனருள் கொண்டுகட லங்கை
வரையடிக் கீழடக்கு மாற்றால் சிறிதும்
உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

(கு - ரை) குறுமுனி - அகத்திய முனிவர். கடலை அங்கையுள் அடக்கும்; வரையை அடிக்கீழ் அடக்கும். ஆற்றால்-தன்மையால்.

இந்திரனோடு போர் செய்த விருத்திராசுரன் அவனுக்கு உடைந்து கடலில் ஒளிந்துகொண்டான். அவனைத் தேடிப் பிடித்துச் சங்காரம் செய்யவேண்டி இந்திரன் அகத்திய முனிவரிடம் வந்து இரப்ப அவர் கடலைக் குடித்தருளினார். வற்றிய கடலில் மறைந்திருந்த விருத்திரனை இந்திரன் கண்டறிந்து கொன்றபின் கடலினைத் திரும்ப முனிவர் விட்டனர் என்பது வரலாறு.

சிவபெருமான் கட்டளையைப் பெற்று அகத்திய முனிவர் தெற்கே வரும்போது விந்தமலை தன்னை கடக்கவிடாது வளர்ந்துகொண்டே வந்தமையை முனிவர் கண்ணுற்றுத் தம் காலால் அழுத்தி, 'நான் மறுபடியும் வடபால் வரும் வரையில் இங்ஙனமே இரு' என்று சபித்துச் சென்றார் என்பர். 43

## வினைசெயல் வகை

107 இறையருளாற் செவ்வே ளிமையோரைக் காக்கும்
திறனுடிச் சூர்தடிந்த செய்கை யதுபோல்

முடிவு மிடையூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(கு - ரை) செவ்வேள் - முருகக் கடவுள். காக்கின்ற திறனை நாடி. சூர்தடிந்த - சூரர்களைக் கொன்றழித்த. இவ்வரலாற்றை 104-ஆம் கவியின் உரையாற் காணலாம். 44

108 இறைவர்க்குத் தொண்டா யிடர்தீர்ந்த தன்றிப்
பெறுபயனும் வாகீசர் பெற்றார்—அறிஞர்
வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(கு - ரை) இடர் - சூலைநோயாகிய துன்பம். பெறுபயன் - வீட்டின்பம். வாகீசர் - திருநாவுக்கரசு நாயனார். ஒருவன் தொழி லாலே தொழிலை முடித்துக் கொள்ளக்கடவன். 45

109 கண்ணறுதல்பா லாழிபெறக் கண்சாத்தித் தாள்காணு
வண்ண மொழிந்தநெடு மாலேபோல்—எண்ணி
வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(கு - ரை) ஆழி - சலந்தரனை அழித்த சக்கராயுதம். நெடு மால் கண் சாத்திய வரலாறு: ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு திருமால் சிவபெருமானை அருச்சித்து வருகையில் எம் பெருமான் அம்மலர்களில் ஒன்றை மறைத்தருளினார். அப்பொழுது திருமால் அம்மலருக்குப் பிரதியாகத் தம் கண்களில் ஒன்றை இடந்து அருச்சித்தார். அதற்குகந்த சிவபெருமான் அவருக்குச் சக்கராயுதத்தையும் பதுமாட்சரென்ற பெயரையும் ஈந்தருளினார் என்று நூல்கள் கூறும். இது திருவீழிமிழலை ஸ்தல வரலாறு. தாள் காணு தொழிந்தது அதனைக் காண வல்லே னென்று அன்பினாலன்றி மமதையால் வராகமாகிப் பூமியைக் கல்லிக்கொண்டு சென்ற சமயம் என்க. 46

தூது

110 பேதையரு நாவலரும் பேதமின்றி யேபொருந்தத்
தூதுசென்ற கொன்றைத் தொடையலார் போலவே

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(கு - ரை) பேதையர் - பரவையார். நாவலர் - சுந்தர மூர்த்தி நாயனுர். கொன்றைத் தொடையலார் - சிவபெருமான்; அவர் தூது சென்ற வரலாறு 61-ஆம் கவியின் குறிப்புரையால் விளங்கும். மூன்று - அன்பு, அறிவு, சொல்வன்மை. 47

## மன்னரைச் சேர்ந்தொழுகல்

111 ஐய னருள்புரிந்த வன்றுசம் பந்தர்தமைத்
தெய்வமெனத் தந்தையருந் தேறினுர்—நொய்தின்
இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

(கு - ரை) ஐயன் - சீகாழியிலெழுந்தருளியுள்ள சிவபெருமான். 17-ஆம் கவியைக் காண்க. 48

## குறிப்பறிதல்

112 உண்ணப் பொதிசோறு மூர்சிவிகை யும்பிறவும்
எண்ண மறிந்தடியார்க் கீந்தருளும்—கண்ணுதல்போற்
கூறுமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறுநீர் வையக் கணி.

(கு - ரை) வையக்கு அணி - வையத்துக்கு அணி. ஒருகால் அப்பர் திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும்போது அவருக்கு வழி நடையாலுண்டான பசி தாகங்களைப் போக்கச் சிவபெருமான் வழியில் ஒரு தோப்பையும் குளத்தையும் உண்டுபண்ணி வேதியராக வந்து அப்பருக்குப் பொதிசோற்றை அளித்து விட்டு, 'நாம் இருப்பது திருப்பைஞ்ஞீலி' என்று சொல்லி மறைந்தருளினுர். இது பெரியபுராணத்திற் கண்டது.

ஊர் சிவிகை - வினைத்தொகை. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் சிறு பிள்ளையாக இருத்தல்பற்றிப் பல தலங்களுக்குச் செல்ல வசதியாயிருக்கும்பொருட்டு அவருக்கு அறத்துறைச் சிவ பெருமானுல் மாறன் பாடி என்ற தலத்தில் முத்துச் சிவிகை வழங்

தப்பட்டது; பெரிய. திருஞா. பிறவும் என்றது தாளம் ஈந்தது, சுந்தரருக்குச் செங்கல்லைப் பொன்னாக்கியது முதலியவற்றை. 49

அவை யறிதல்

113 பொல்லார்மு னெல்லாம் புகன்று சிவஞானம்
அல்லார்மு னல்லா ரடங்குதலால்—வல்லார்
ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(கு - ரை) பொல்லார் - பொல்லாப் பிள்ளையார் என்ற நாமம் பெற்ற விநாயகர். நல்லார் - நம்பியாண்டார் நம்பி; எழுவாய்.

திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பியென்ற ஆதி சைவப் பெரியார் ஒருவர் இருந்தார். சிறு பருவத்தில் அவர் தந்தையார் அவரைப் படிக்க ஒரு பள்ளிக்கு அனுப்பி வைத்தார். சிவஞானச் சார்பில்லாத ஆசிரியரிடம் கற்க மனமில்லாத நம்பியாண்டார் நம்பி பள்ளிக்குச்செல்லும் விருப்பம் இலராயினர். ஒருநாள் பொல்லாப் பிள்ளையாருக்கு இவர் பூசை செய்யச் சென்றிருந்த போது அவர்பால் பக்திமேலிட்டு அவரையே குருவாகக்கொண்டு சிவாகமாதிகளையும் அடியார் சரித்திரங்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்தார் என்பது வரலாறு. 50

114 இறைநூ லுரையாடார் இன்புற்றார் சால
அறிவா ருரைகேட்ட வன்றே—நெறிநின்று
கற்பறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து,

(கு - ரை) இறைநூல் - இறையனார் அகப் பொருள் என்ற இலக்கண நூல். உரையாடார் - மூங்கையராயிருந்த உருத்திர சன்மர். அறிவு சால் உரையென்றது மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் அந்நூலுக்குச் செய்த உரையை. 'இறைநூல் அறிவு ஆருரை கேட்டவன்றே உரையாடார் சால இன்புற்றார்' என்று கூட்டுக. 51

அவையஞ்சாமை

115 சங்கத்தார் வாக்குந் தமிழுணர்த லாற்சொக்க
லிங்கந் தமிழ்ப்புலவ ரெல்லார்க்கும்—சிங்கமன்றே
கற்றருட் கற்ற ரெனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்.

(கு - ரை) ஒரு காலத்தில் மதுரைச் சங்கத்திருந்த 49-புலவர்களும் தாம் தாம் இயற்றிய பாடல்களை அறியாது ஒருவர் செய்தவற்றை மற்றொருவர் தம்மவாகத் தம்முள் மயங்கிப் பிணக்கங் கொண்டார்கள். அப்பொழுது சொக்கலிங்கப் பெருமான் தமிழ்ப் புலவராக வந்து அவர்களுடன் இருந்து அவர்கள் யாவரும் எழுதியவற்றைத் தம்முன் பாடிக் காட்டச் செய்து அவரவர்கள் இயற்றியதை அவரவர்களுக்கு எடுத்துக் காட்டினர். இவ்வரலாறு திருவிளையாடற் புராணத்திற் சங்கப் பலகை கொடுத்த படலத்திலுள்ளது. 52

நாடு

116 இறைசாருந் தென்னுடே நாடேனை நாடு
பிறவுடைய வேனும் பெறுகாண்—உறையுமவர்க்
காங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(கு - ரை) இறை - பாண்டியராக மதுரையை ஆண்ட சோமசுந்தரக் கடவுள்; 64. இறை சாரும் தென்னுடே நாடு : 'தென்னுடுடைய சிவனே போற்றி ' (திருவா.) ஏனை நாடு : எழுவாய்; பிறவுடைய வேனும் - வேறு பெருமைகளை அடைந்திருந்தாலும். பெறு - நாடென்று சொல்லப் பெறமாட்டா. அமைவு - பொருத்தம். 53

அரண்

117 குன்றவில்லி காத்தருளுங் கூடலர ணேயன்றி
நின்ற வுளவெனினு நிற்குமோ—என்றும்
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்ல தரண்.

(கு - ரை) குன்றவில்லி - மேருமலையை வில்லாகவுடையவர். கூடல் - மதுரை. சௌந்தர மாறராகப் பாண்டிய நாட்டை ஆண்ட சோமசுந்தரக் கடவுள் வாளை உறைக்குள் இட்டபடியே பகையிருள் நீக்கி ஆண்டனரென்பது வரலாறு. "கறைநி றுத்திய கந்தரச் சுந்தரக் கடவுள், உறைநி றுத்திய வாளினாற் பகையிரு ளொதுக்கி" (திருவிளை. நாட்டுப் படலம், 1.) 54

## பொருள் செயல் வகை

118 தந்தைபொருட் டெந்தைபிரான் சம்பந்தர்க் கீந்தகிழி
நந்திப் பயனளித்து நல்கிற்றே—முந்தும்
அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(கு - ரை) திருஞான சம்பந்தர் திருவிடைமருதூரில் தங்கியிருந்தபோது அவருடைய தகப்பனார் சிவபாத இருதயர் அங்கே வந்து தாம் செய்யவிருக்கும் வேள்விக்குப் பொருள் வேண்டுமென்று கேட்க ஞானமூர்த்திகள் திருவாவடுதுறைச் சிவபெருமான்மீது பதிகமோதிப் பொற்கிழியை அடைந்து அதனைத் தம் தந்தையாரிடம் சேர்ப்பித்தனர். சிவபாத இருதயரேயன்றிப் புகலியிலிருந்த மற்ற அந்தணர்களும் வேள்வி செய்யக்கூடிய அளவில் அப்பொற் கிழியில் பொன் இருந்ததென்பர்; பெரிய. திருஞா. 422–30. 55

119 திகம்பரர்க்கு நஞ்சைத் திருமகளைப் பீதாம்
பரதரர்க் கீயும் பயோதி நிரந்தரமும்
இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(கு - ரை) திகம்பரர் - திசைகளை ஆடையாகவுடையவர்; திருவாணர் என்றபடி. பீதாம்பரதரர் - மஞ்சள்நிற ஆடையைத் தரித்திருப்பவர். சிவபெருமானையும் திருமாலையும் முறையே திகம்பரர் பீதாம்பரதரர் என்றது அவர்தம் வறுமை செல்வ நிலைகளைப் புலப்படுத்த. பயோதி - பாற்கடல்; பயோததி என்பதன் விகாரம்.

ஒப்பு : "மேலாடை யின்றிச் சவைபுகுந் தாலிந்த மேதினி யோர், நூலா யிரம்படித் தாலுமெண் ணார்நுவல் பாற்கடலோ, மாலா னவரணி பொன்னுடை கண்டு மகளைத்தந்தே, ஆலால மீந்தது தோலாடை சுற்று மரன்றனக்கே" (தனிப் பாடல்.) 56

## படைமாட்சி

120 எத்திறந்த நூலு மிலங்கு சிவஞான
சித்தியொன்று காணச் சிதையுமே—மெத்த
ஒலித்தக்கா லென்னு முவரி எலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(கு-ரை) சிவஞான சித்தி: 103-ஆம் செய்யுளின் குறிப்புரையைப் பார்க்க. சிவஞான சித்தியாரின் பெருமை : "பேருகப், பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதிபோதும்" (சிவபோகசாரம், 23.) 57

121 ஆலமுகந் தானைமணந் தாள்படையே வெல்படையாம்
காலனையுந் தோற்றோடக் காணுதலால்—ஞாலத்துக்
கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

(கு - ரை) மணந்தாள் - மலையத்துவசன் பெற்றெடுத்த தடாதகைப் பிராட்டியார் ; 18. முடிசூடியதும் பிராட்டியார் திக்கு விசயஞ் செய்யப் புறப்பட்டுப்போய் இந்திரன் முதல் காலனை உள்ளிட்ட திக்குப் பாலகர்களை வென்று வந்ததனால், இவர் காலனையும் தோற்றோடச் செய்ததாக ஆசிரியர் கூறினார். 58

## படைச் செருக்கு

122 இறையோ டெதிர்ந்திறந்த தென்றுரூ மென்ன
குறையோ பிறரையடுங் கூற்று—முறையேகாண்
கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(கு - ரை) கூற்று - யமன். மார்க்கண்டேயருடைய ஆவியைக் கவர்ந்துசெல்ல எண்ணிய யமன் இலிங்கத்தை இறுகத் தழுவியிருந்த மார்க்கண்டேயரோடு இலிங்கத்தையும் சேர்த்துப்

பாசத்தால் இழுக்க முயன்றதை நினைத்து 'இறையோ டெதிர்ந்து' என்றார். 59

நட்பு

123 பிள்ளை யிறைவ ரருள்பெறலுங் கேட்டிருந்த
கள்ளவிழ்பூங் கோதையார் காதலாற்—சொல்லும்
புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.

(கு - ரை) பிள்ளை - திருஞானசம்பந்த மூர்த்திகள். அருள் பெறலும் - ஞானப் பாலையுண்டு சிவஞானத் தொடர்பு பெற்றதும்; 17,111. ஆளுடைய பிள்ளை ஞானப்பாலுண்டமையைக் கேள்வியுற்றதும் மதுரையிலிருந்த மங்கையர்க்கரசியார்க்கு மார்பில் பால் சுரந்ததென்பது வரலாறு. இதனை, "இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு, முலைசுரந்த வன்னைபோ முன்னின் - நிலைவிளம்பக், கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா, இங்குயர்ந்தார் யார்சொல் லெனக்கு" என்னும் நால்வர் நான்மணிமாலைச் செய்யுளாலுணர்க. 60

124 நன்னிழலி னீர்வைத்து நம்பர் நடுப்படையில்
தென்னவரி யாதுருகுந் தெய்வியான்—முன்னார்
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

(கு - ரை) நிழலில் நீர்வைத்து - தண்ணீர்ப் பந்தரை அமைத்து. நம்பர்-சோமசுந்தரக் கடவுள். இராஜேந்திர பாண்டியன் என்பான் அரசு புரியும் காலத்தில் சோழனொருவன் அவன்மேல் போர் தொடுத்துவர இருவருக்கும் போர் நடந்தது ; அப்போது சிவபெருமானருளால் குளங்குட்டை யாவும் வறண்டு, யுத்தகளத்தில் உண்ணீர் கிடையாமற்போய் இருதிறத்தாரும் களைத்துப் போயினர். அச்சமயம் சிவபெருமான் மானிட வடிவங்கொண்டு யுத்த பூமிக்குச் சென்று தண்ணீர்ப் பந்தல் ஒன்றை அமைத்துப் பாண்டியனது சேனையின் நீர் வேட்கையை மாற்றி யருளினார். அதனால் அம்மன்னவன் களைத்துப்போயிருந்த சோழனை வென்று மீண்டான் என்பது வரலாறு ; திருவிளை. தண்ணீர்ப். 61

## நட்பாராய்தல்

125 மாறனது கேட்டி லுறுதியென மாணிக்கம்
கூறி விலையாக் கொடுக்குமிறை—ஆதலாற்
கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(கு - ரை) வேட்டை மேற் சென்ற வீரபாண்டியன் என்பான் திடீரென்று புலிக்கோட்பட்டு இறந்துவிட அவனது காமக் கிழத்தியரின் மக்கள் அரண்மனையிலிருந்த நகைகளையும் நவமணி களையும் திருமுடியையும் அபகரித்துக் கொண்டு ஓட்டம் எடுத் தனர். பட்டமகிஷியின் வயிற்றிற் பிறந்த பாலகனுக்கு மந்திரி கள் முடிசூட்ட எண்ணுகையில் கிரீடம் இல்லாமையால் யாது செய்வதென்று திகைத்துச் சோமசுந்தரரை வேண்ட அவர் மாணிக்கம் விற்கும் வணிகராக வந்து முடிக்கும் பிறகலன்களுக் கும் வேண்டிய மணிகளை வாழ்த்திக் கொடுத்தருளி விலைபெறுமல் மறைந்தருளினுர் என்பர்; திருவிளை. மாணிக்கம் விற்ற படலம். 62

## பழைமை

126 வழுவுசெய்தும் மாலயர்க்கு வந்தரனே பின்னும்
பழைமை கருதியருள் பண்ணும்—முழுதும்
அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(கு - ரை) வழுவாவது அன்பினலன்றி மமதையாற் சிவ பெருமானுடைய அடிமுடிகளைக் காண்போமென்று கூறிப் புகுந்த செயல். மாலயர் - மாலும் பிரமனும். அருள் பண்ணும் - அந்த அயனும், மாலும் பின் வந்து வேண்ட வேண்டியவற்றை யீந்து அவர்களுக்கு அருளைப் பாலிப்பர். 63

## தீ நட்பு

127 தக்க னுறவெனினுஞ் சங்கரன்றன் நட்பிற்குத்
தக்கவனன் றென்றொறுத்தல் சாலுமே—மிக்க

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலின் குன்ற லினிது.

(கு - ரை) உறவெனினும் - தன் பெண்ணாகிய தாட்சாயணியா ரைச் சிவபெருமான் மணந்ததனால் தன் மாமன் முறை யெனி னும். சங்கரன் - எழுவாய். தக்கனது வரலாறு 10, 49-ஆம் செய்யுட்களாலும் விளங்கும். 64

கூடா நட்பு

128 ஆரூரர்க் காரூரர் போன்றொற்றி யூரர்செயும்
கூடாநட் பாயோ குறைவரலால் ஒரும்
இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(கு - ரை) ஆரூரர்: முன்னது சுந்தரமூர்த்தி நாயனாரையும் பின்னது பரவையாரையும் குறிக்கும். இடம் பற்றி இருவ ரும் ஓரினம் என்பது தோன்ற 'ஆரூரர்க் காரூரர்' என்றார். ஒற்றியூரர் - திருவொற்றியூரிலிருந்த சங்கிலியார். நட்பு - மணந்ததால் வந்த தொடர்பு. குறைவரலால் - கண்ணொளி மழுங்கியதனால். சுந்தரமூர்த்தி நாயனார் ஒருகால் ஒற்றியூர்க்குச் சென்றிருந்தபோது அங்கே கோவிலில் சங்கிலியாரைக் கண்டு அவரை மணஞ்செய்துகொள்ள விரும்பினார். சங்கிலியார் தம் மைச் சுந்தரர் என்றும் பிரிவதில்லை யென்று உறுதி செய்து கொடுப்பின் தாம் அவரை மணப்பதாகக்கூறினார். சுந்தரர் அதற் கிசைந்து பரவையாருக்கு உறுதிசெய்து அவரை மணந்தார். பின் திருவாரூர்த் தியாகேசரைத் தரிசிக்கும் ஆர்வ மேலீட்டினால் தம் வாய்மையைப் பொருட்படுத்தாது சுந்தரர் ஒற்றியூரை விட் டுப் புறப்பட்டார். அக்கணமே கண்களை இழந்தார். சிவபெரு மானைப் பலகால் பாடிப்பாடி யுருகி அவர் பின்பு கண்ணொளி பெற்றாரென்பது வரலாறு. 65

பேதைமை

129 அரனன்பர் வாகீச ரன்றமணை நீங்கப்
பெரிதின்ப மன்றியுண்டோ பீழை—தெரியிற்

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

(கு - ரை) 'பீழை உண்டே' என்று மாற்றுக. பீழை - வருத்தம். வாகீசர் சமண மதத்தைவிட்டு மீட்டும் சைவரான வுடன் அவரது சூலைநோய் நீங்கியதுமன்றி முடிவில் அவர்க்கு வீடுபேறும் கிடைத்தது; 108-ஆம் கவியையுங் காண்க. பிரிவின் கண் துன்பம் இல்லாமையால் அறிவிலார் நட்பு நல்லது. 66

புல்லறிவாண்மை

130 ஈசனடி யாரிசையா தேயு மிசைந்தமணர்
தாமே கழுவேறுந் தன்மையால் ஞாலத்
தறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

(கு - ரை) ஈசனடியார் - திருஞான சம்பந்தமூர்த்திகள். இசையாதேயும் - தமக்கியற்கையாக இருந்த அருள் மிகுதியினால் சமணர்களைக் கழுவேற்ற உடன்படாதிருந்தும்; தாமாகவே சமணர் கழுவேறினரென்பது இந்நூல் 35-ஆம் கவியாலும்' இந்நூலாசிரியரே முக்தி நிச்சயம் வெண்பா 2-க்கு எழுதிய விரிவுரையாலும், தக்கயாகப்பரணி, 170-ஆம் தாழிசையாலும், அதன் உரையாலும் விளங்கும். செறுவார் - பகைவர். 67

131 ஆதி மொழியை யறியா னறிந்தேனென்
றோதியது மீளப்போ யோதியது—மேதமாம்
கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயந் தரும்.

(கு - ரை) ஆதிமொழி - ஓம் என்னும் பிரணவ மந்திரம். அறியான் - நான்முகன். அயன் பிரணவப் பொருளை அறியாமல் விழித்தது குமரக்கடவுள் முன்னிலையில். கல்லாதவற்றைக் கற்றேமென்றல் கற்றனவற்றையும் ஐயுறச்செய்யும். 68

132 எறும்புகடை யானைதலை யீஈனைப்பூ சித்துப்
பெறுங்கதிகண் டுந்தேறார் பேய்கள்—அறிந்த
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

(கு - ரை) சிவபெருமான் புலவனுகிச் சங்க மண்டபங் குறுகி நக்கீரருடன் பல பேசி இறுதியில் தம் ஆற்றலை வெளிப் படுத்தினமையின், 'விளையாடி' என்ருர். இஃது ஒரு திருவிளை யாடல் என்பது கருத்து. இதிற் கண்ட வரலாறு 35, 94-ஆம் கவிகளாலும் விளங்கும். 72

## உட்பகை

136 நாரதர்மா லுட்பகையாய் நம்பரடி பேணுத
வாறுசொல்லி முப்புரமும் மாய்வித்தா ராதலினல்
உட்பகை யஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(கு- ரை) நாரதர் மால்......மாய்வித்தார் - திரிபுரவாசிகளை ஒழிக்கக் கருதிய திருமால் நாரதரை அவர்கள்பால் ஏவிப் பாஷண்ட மதத்தை (நாஸ்திகத்தை) அவர்களுக்கு உபதேசிக்கச் செய்து சிவபக்தர்களாக இருந்த அவர்களின் மனத்தைக் கெடுத்துச் சிவபெருமானுடன் போராடும்படி செய்தார் என்பது வரலாறு. 23-ஆம் செய்யுளின் குறிப்புரையைப் பார்க்க. 73

## பெரியாரைப் பிழையாமை

137 மன்றுடையார் குன்றை மதியா தெடுத்தரக்கன்
அன்று படுந்துயர மார்படுவார்—என்றும்
பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

(கு - ரை) குன்று - கைலாசம். அரக்கன் - இராவணன். ஆர் படுவார் : படமுடியாது என்றபடி. இராவணன் விமானத்திற் செல்லுகையில் கைலை மலையால் அது தடையுண்டது. அப்பொழுது நந்திதேவர் அவனை விலக்கவும் கேளாது இராவணன் கைலையைப் பேர்த்தெறியத் தொடங்கினன். அதுகண்ட சிவ பெருமான் அவனை மலையின்கீழ் நெறித்து அவனைத் தண்டித்தார் என்பர். 74

## பெண்வழிச் சேறல்

138 திசைவென் றவள் பதியுஞ் செல்லா தவள்பின்
அசைவின்றித் தானுலக மாளும்—இசையொன்ற
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கென்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.

(கு - ரை) திசை வென்றவள் பதி - தடாதகைப் பிராட்டியாரின் தலைவரான சௌந்தர பாண்டியர். அவள் பின் செல்லாது - அந்த அம்மையார் அரசு செலுத்த அவர் வழி ஒழுகாது. 'இசை ஒன்ற ஆளும்' எனக் கூட்டுக. மனத்திண்மை யுடையாருக்கு மனைவியால் வரும் அறியாமை இல்லை. 75

## வரைவின் மகளிர்

139 புளிதாரான் றூற்றுக்கும் போயபுலின் றூழ்க்கும்
பனிமலர்மென் கோதையெழிற் பாவை ஒழியப்
பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

(கு - ரை) இங்கே சுட்டிய வரலாறு தெளிவாக விளங்கவில்லை. 76

## கள்ளுண்ணாமை

140 அன்னால் பழமலையை யண்ணுமுன் கள்ளுண்ண
எண்ணில் பெருந்துயர மெய்துநலான்-மண்ணுலகத்
துண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்.

(கு - ரை) பழமலை - விருத்தாசலம். சசிவன்னன் என்னும் அந்தண வாலிபன் இறைச்சியும் கள்ளும் ஈசலும் அருந்தி ஒழுக்கங் கெட்டுத் திரிவதைக் கண்டு வருந்திய அவன் பிதா தேவ பக்தர் என்ற யோகியை வேண்டி அவர் ஆலோசனையின்படி தம் புத்திரனை மாநந்த பராயணர் என்ற முனிவர்பால் அழைத்துச் சென்றார். அம்முனிவரின் அருளால் சசிவன்னனுடைய சகல

பாவங்களும் நீங்கிப் போயின. இது விருத்தாசல புராணத்திற் கண்டவரலாருகும். 77

## சூது

141 அரனடியார் நித்த மமுதுசெய வேண்டிக்
கவறுருட்டிக் கைவந்தா ரன்றிப்—பிறரெல்லாம்
வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(கு - ரை) தொண்டை மண்டலத்தில் திருவேற்காடு என்ற ஊரினரான ஒரு வேளாளர் சிவனடியார்களை உண்பித்து அவர்கள் வேண்டுவன கொடுத்து ஒழுகிவந்தார். இடையில் பொருள் வருவாய் குறையவே தமக்குக் கைவந்த சூதாடிப் பலரிடம் பெற்ற பொருளைக் கொண்டு தம் அறத்தைத் தப்பாமல் நடத்தி இறுதியில் முத்திபெற்ருர் என்பர்; பெரிய. மூர்க்க. 78

## மருந்து

142 மண்ணுண் டவனறியா மண்ணுறுண்டை யொன்றுகொடுத்
தெண்ணருநோய் தீர்க்குமெழில்வேளூர்க்-கண்ணுறுதல்போல்
நோய்நாடி நோய்முத னாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(கு - ரை) மண்ணுண்டவன் - திருமால். மண்ணுருண்டை - வைத்தீசுவரன் கோவிலில் உள்ள திருவேம்படிப் புற்றுமண். வேளூர் - வைத்தீசுவரன் கோயில்; சடாயுவும் வேதமும் முருகக் கடவுளும் சிவபெருமானைப் பூசித்த தலம். இந்த ஸ்தலத்தில் ஒரு வேப்பமரத்தடியிலுள்ள மண் எல்லாநோய்களையும் தீர்ப்பதாக ஓர் ஐதிகம் நிலவி வருகிறது; 'மண்டலத்தி னுளும் வைத்திய ராய்த் தாமிருந்தும், கண்டவினை தீர்க்கின்றீர் கண்டீரோ-தொண்டர், விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரெந் நாதர், மருந்தைப் பார்த் தாற்சுத்த மண்' (தனிப்பாடல்.) 79

அங்கவியல் முற்றும்

# ஒழிபியல்

## குடிமை

143 மன்றுமன் புலியூர் வாய்மை மதியானை
அன்னை வயிற்றுறையென் றையுற்றார்—என்னை
நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்.

(கு - ரை) சிதம்பரத்தின் மகிமையைச் சில பெரியவர்கள் சொல்ல அதை மதியாமலும் மறுத்தும் பேசிய ஒருவனை நோக்கி அவர்கள், 'இவனை இவன் தாய் சரியான வழியிற் பெற்றிராள்' என்று ஐயுற்றனரென்பது வரலாறுபோல் தோன்றுகிறது. 80

## மானம்

144 இறையருள்சேர் தென்னவனன் றிந்திரன்பாற் சென்றும்
குறையிரவான் போயிருந்தான் கூட—முறையன்றே
இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.

(கு - ரை) தென்னவன் - உக்கிரகுமார பாண்டியன். ஒரு காலத்தில் தமிழ் நாட்டில் மழையின்றி உயிர்கள் வாடவே உக்கிரன் உள்ளிட்ட தமிழ்வேந்தர் மூவரும் அகத்திய முனிவரின் அருளினால் விண்ணேகி அங்கே இந்திரனைக் கண்டு மழைசுரக்க வரம் வேண்டப் புறப்பட்டனர். இந்திரன் அம்மூவருக்கும் தனக்குக் கீழ் நிலையில் ஆசனமிட்டு வரவேற்றான். பாண்டியன் மட்டும் தனக்கு இட்டிருந்த ஆசனத்தில் அமராது இந்திரனுடன் சமமாக அரியணை ஏறி அமர்ந்தான். பாண்டியனை எங்ஙனமேனும் ஒறுக்க எண்ணிய விண்ணவர்வேந்தன் அம்மூவரையும் வந்த காரியம் ஏதென்று வினவினான். 'ஏற்பதிகழ்ச்சி' என்பதை எண்ணி உக்கிரன் வாளா இருப்ப மற்ற இருவரும் தம் நாட்டுக்கு மழை வேண்டுமென்று இரந்து பெற்றுச் சென்றார்கள். பின்பு சதமகன் தாங்க முடியாத ஆரமொன்றைப் பாண்டியன் கழுத்திலிட எம்பெருமான் அருளால் அதனை உக்கிரன் ஏற்று வீறுதோன்ற

இருந்தனன். பின்னர் மழை வளத்தை வேண்டாமலே தன் நாடு திரும்பினுன் என்பது திருவிளையாடற் புராணத்திற் கண்ட வரலாருகும். 97-ஆம் கவியின் குறிப்புரையையும் காண்க. 81

## பெருமை

145 சங்கரன்போய் நின்றளவிற் சங்கப் பலகையின்மேல்
அங்கிருந்தா னக்கீர ஞயினுமென்—எங்கணும்போய்
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

(கு - ரை) நக்கீரரைப் பற்றிய வரலாறு 34, 95-ஆம் கவிக ளின் குறிப்புரையால் விளங்கும். 82

## சான்ருண்மை

146 உலகர்க்குத் தந்தை யொருத்திக்குத் தாயாய்ப்
பலவு முபகரித்த பண்பின்—புலவர்
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு.

(கு - ரை) உலகுக்குத் தந்தையாகிய சிவபெருமான் தாயாக வந்தது திரிசிரபுரத்தில் என்க. ஒரு வணிக மாது பிரசவ வேதனை யுறுகையில் அவளது தாய் உரிய சமயத்தில் உதவிக்கு வர இயலாமற்போகவே சிவபெருமான் தாயாக வந்து பிரசவத்தை இனிது நடத்தி உண்மைத் தாய் வீடு நுழைந்ததும் மறைந்தருளி ஞர் என்பது வரலாறு. 83

147 பன்றிக் குருளைக்குப் பன்றியாய்க் கண்ணுதலும்
சென்று முலைகொடுக்குஞ் செய்தியால்—என்றும்
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு.

(கு - ரை) மதுரையை அடுத்த குரு விருந்த துறையில் வசித்து வந்த ஒரு வேளாளர் தாம் பெற்ற 12-பிள்ளைகளை இளம் பிராயத் திலே விட்டு நீங்கி மரணமுற்ருர். அப்பிள்ளைகள் மூர்க்கர்களாகி வேட்டுவத் தொழிலை மேற்கொண்டு அருகே யிருந்த காட்டில்

தவம் செய்துவந்த வியாழபகவானைத் துன்புறுத்த அவர் இவர்களைப் பன்றிக் குட்டிகளாகப் பிறந்து தாயை இழந்து வருந்தும்படி சபித்தார். அதன்படி இவர்கள் பன்றிக்குட்டிகளாகப் பிறந்து தம் தாய் வேட்டையிற் கொல்லப்படவே தனித்து வருந்துகையில் சிவபிரான் தாய்ப் பன்றியாகி வந்து அவற்றைப் பாலூட்டி அன்புகாட்டிப் பன்றியின் தலையும் மனித சரீரமும் பெறுமாறு அருளி மறைந்தனர் என்பது வரலாறு; திருவிளை. பன்றிக்குட்டி. 84

148 இறையருள்சேர் தென்ன னிருங்கடலு மாழி
பிறழ நிலைநிறுத்தும் பேராற் கடல்பிறழ
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(கு - ரை) தென்னன் - உக்கிரகுமார பாண்டியன். ஆழி - கரை; "பெருங்கடற்காழியனையன்" (புறநா. 330 : 3-4) உக்கிர குமார பாண்டியன் 96-பரிவேள்விகளைச் செய்துமுடித்ததை கண்ட இந்திரன் பொறாமைகொண்டு கடல் வேந்தைக் கூவி மதுரையை அழிக்குமாறு கூறினான். ஒருநாள் இரவு கடல் ஊழிக் காலம்போற் பொங்கிவர உக்கிரன் சித்தராகித் தன் கனவிற் றோன்றிய சோமசுந்தரக் கடவுளின் யோசனையின்படி வேலெறிந்து அதனை வற்றச் செய்தான் என்பது வரலாறு; திருவிளை. கடல் சுவற. 85

பண்புடைமை

149 முப்புரங்கள் கொன்றுமரன் மூவர்க் கருளியதை
இப்பொழுது நாளுமுல கேத்துமே—செப்பின்
நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

(கு - ரை) முப்புரவாசிகள் வரலாறு 183, 186-ஆம் கவிகளாலும் அவற்றின் உரையாலும் விளங்கும். 86

நன்றியில் செல்வம்

150 எங்களிறை யன்பருக்கொன் றீயாமை யாற்பிறந்து
பங்கப் படத்துணிந்த பாவிதிருத்—தங்கியெனும்

அற்றூர்க்கொன் றூற்றூதான் செல்வம் மிகுநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

(கு - ரை) திருத்தங்கி - திருக்குடந்தையில் வாழைத்தோட்டம் போட்டிருந்த ஓர் உலோபி. இதிற் காணப்படும் செய்தி 13-ஆம் கவியின் குறிப்புரையால் விளங்கும். 87

151 கல்வில் லுடையார் கருணைபெற மாட்டாது
வல்வினையிற் பட்டழுந்தும் வாதாவி-வில்வலன்போல்
நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

(கு - ரை) கல்வில் - மேருமலையாகிய வில். வாதாவி வில்வலன் என்பவர்கள் தாரகாசுரனுடைய சகோதரி அசமுகியின் மைந்தர்கள். வில்வலன் வாதாபியை ஆடாக்கிக் கறிசமைத்து விருந்தாக வருபவருக்கிட்டு அவர்கள் உண்டபின் அமிருத சஞ்சீவினி மந்திரத்தை உச்சரித்து அழைப்ப வாதாவி விருந்தினரின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வருவது வழக்கம். பிறகு இருவருமாக விருந்தினரின் உடலத்தைப் புசித்து மகிழ்வர். ஒருகால் தேவர்களின் வேண்டுகோளின்படி அகத்திய முனிவர் இவர்களுக்கு விருந்தினராக வந்து வாதாவியை வயிற்றில் ஜீரணிக்கையில் வில்வலன் காலில்விழுந்து வேண்ட அவனை மன்னித்தனர். இது கந்தபுராணத்திற் கண்ட வரலாறாகும். 88

நாணுடைமை

152 இறையருளும் தென்னவன்பா லிந்திரன்வந் தன்று
குறைபடலும் நாணியது கூறின்—முறையன்றோ
ஊனுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(கு - ரை) இறையருளும் தென்னவன்-சௌந்தர பாண்டியராக வந்த சோமசுந்தரக் கடவுள் ஈன்ற உக்கிரகுமார பாண்டியன். குறைபடலும் - முடியிழந்து புறமுதுகிட் டோடுதலாகிய குறையை எய்துதலும். நாணியது - நாணமடைந்ததை. இந்த வரலாறு 97, 144-ஆம் கவிகளால் விளங்கும். 89

## குடிசெயல் வகை

153 பாணன் குடியுயரப் பண்டரனுங் கூடல்வரு
பாணனெனச் சாதாரி பாடுதலால்—நாளும்
குடிசெய்வ லென்னு மொருவர்க்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

(கு - ரை) பாணன் - பாணபத்திரர். சாதாரி - மாலை நேரத்திற் பாடும் ஒரு பண். இதிற்கண்ட வரலாற்றை 90-ஆம் கவியின் குறிப்புரையிற் காண்க. 90

## உழவு

154 தென்னாட் டுழவ ரிறைகொண்டு கண்ணுதலும்
அந்நாட் டிருந்துலக மாளுதலால்—தன்னேர்
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

(கு - ரை) தென்னாடு - பாண்டி நாடு. இறை - குடிகள் செலுத்தும் வரி. கண்ணுதல் - சௌந்தரபாண்டியர். அரசருடைய மேம்பாட்டுக்கு உழவர்களின் மேம்பாடே காரணம் என்பது கருத்து; 'வெண்ணெய்மன் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி' (கம்ப. திருமுடி. 33) என்றதனை நோக்குக. 91

## நல்குரவு

155 மூவலிங்க பூசை முயன்ற பயன்வருமுன்
சீல முடையவிப சித்தெனவே—ஞாலத்தில்
துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(கு - ரை) விபசித்து: கோசல தேசத்து அந்தணன். வீடு வாசல், நாடு, நகரம் யாவையும் துறந்து திருமணிமுத்தா நதியில் நீராடிய புண்ணியத்தால் பழமலை சென்று பல பணிகளைச்செய்து முத்தி யடைந்தவன். இவன் வரலாற்றை 53-ஆம் கவியாலும் உணர்க. 92

## இரவு

156 ஈச ரிரந்தா லு மீந்தாரோ டொத்துயர்ந்தார்
நேச ரிடத்திரந்து நிற்றலால்—பேசின்
இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவி லுந் தேற்றுதார் மாட்டு.

(கு - ரை) நேசர் - இயற்பகையார், மானக்கஞ்சாறர். 93

## இரவச்சம்

157 என்றியம்பி ஞர்மொழியாற் போலு மிறையாயும்
சென்றிரந்து நிற்குஞ் சிவன்றானும்—அன்றே
இரந்து முயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(கு - ரை) இறையாகிய சிவன்றானும் சென்று இரந்து நிற்கும்; இதனை நோக்கியே திருவள்ளுவரும், 'இரந்தும்......உலகியற்றியான்' என்றமொழியால் இயம்பினர் போலும். 94

158 ஒருவர் செயவேண்டா வுலகியல்பா மென்னும்
அருகர்பிறர் கோள்சிதைக்கு மாற்றால்—வருவ
திரந்து முயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(கு - ரை) ஒருவர் செய வேண்டா; உலகு இயல்பாம்: உலகம் படைப்பும் அறிவுமற்றது என்பது ஜைனமதக் கொள்கையாகும்; 'மூவா முதலா வுலகம்' (சீவக. 1.) அருகர் பிறர் - அருகராகிய பிறருடைய. கோள் - கொள்கை. வருவது : எழுவாய். இரந்தும்......உலகியற்றியான்: பயனிலை. 'உலகியற்றியான்' என்ற தொடரைத் திருவள்ளுவர் கூறுவதனுல் உலகம் படைப்புக் குட்பட்ட தென்பது அவரது கொள்கையாகும். 95

## கயமை

159 மணலமுதா மாறு மனையாட்குக் கூறிப்
பரனருடீர் மாமறையோன் பண்பின்—நுவலும்

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(கு - ரை) திருவாப்பனூர்ப் பெருமானை அருச்சித்து வரும் ஓர் அந்தணன் கொடிய பஞ்ச காலத்தில் சிவபிரான் அருளால் மணலை அமுதாகச் சமைக்கும் ஆற்றல் பெற்றிருந்தான். அவன் அந்த ரகசியத்தைத் தன் மனையாளிடம் கூறியதனால் மணலைச் சமைக்கும் வன்மை அவனைவிட்டு நீங்கியது (திருவாப்பனூர்ப் புராணம்.) 96

ஒழிபியல் முற்றும்

பொருட்பால் முற்றும்

# 3. காமத்துப்பால்

## களவியல்

### தகையணங் குறுத்தல்

160 ஆரூரன் கண்டளவி லாரூரன் கோயிலிடை
ஆரூரிற் கென்றமைந்த வாயிழையைத்—தேரும்
அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு

(கு - ரை) ஆரூரன் : முன்னது சுந்தரமூர்த்தியையும் பின்னது திருவாரூர்த் தியாகேசப் பெருமானையும் குறிக்கும். ஆயிழை - பரவையார். 'அணங்குகொ...........னெஞ்சு' என்ற குறட்பாவினோடு 'என்று' என்பதனைக் கூட்டித் 'தேரும்' என முடிக்க. பின்னுள்ள சில கவிகள் இவ்வித முடிபைப் பெறும். சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூர்க் கோயிலுக்குச் சென்றிருந்த போது அங்கே பரவையாரைக் கண்டு விதிகூட்டுதலால் இச்சை கொண்ட வரலாறு பெரிய புராணத்தினால் தெரியவரும். 1

161 இறைவ ரருள்கதிர்வே லெந்தை குறவர்
மடமகளைக் கண்டு வருந்திப் புகலும்

கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

(கு - ரை) முருகக் கடவுள் தினைப்புனத்தைக் காத்து வந்த வள்ளியம்மைபால் சென்று காதல் மொழி பல இயம்பி இறுதியில் அவரை மணந்த கதை வெளிப்படை. 2

## குறிப்பறிதல்

162 அரனருள்சேய் மான்மகளென் றுங்கிருவர் தங்கள்
இயல்பு மறிந்த விகுளை கருதுவது
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

(கு - ரை) மான் மகள் - வள்ளியம்மையார். இகுளை - தோழி. அம்மையாரும் தோழியும் இருப்புழி முருகப்பெருமான் பாங்கியின் உடம்பாட்டைப் பெறும் நிமித்தம் அங்கே சென்ற போது நிகழ்ந்ததைக் கண்டு தோழி இங்ஙனம் கூறினாள். இணை - இரண்டு. 3

## புணர்ச்சியின் மகிழ்தல்

163 அரனடியா ரல்லா ரடைபதந் தானும்
இருநிலவின் பத்திழிவா மென்று—வருவதிது
தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு.

(கு - ரை) இவ்வுலக இன்பத்தினும் அரி அயன் இந்திரன் முதலியோர் பதங்களில் நுகரும் இன்பம் இழிந்ததென்பது கருத்து. 4

164 அல்லொளிசேர் கண்டத் தரனருள்சேய் மானின்ற
வல்லியிரு கொங்கை மணந்ததற்பின்—சொல்லியது
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

(கு - ரை) அல் - இருள். சேய் - முருகக்கடவுள். சொல்லியது : எழுவாய். 'கண்டு......உள' என்பது பயனிலை. 5

நலம்புனைந்துரைத்தல்

165 மின்னுசடை வேந்தரருள் வேலனொரு மானீன்ற
பொன்னை மகிழ்ந்து புனைந்துரைக்கும்—இந்நிலத்து
நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

(கு - ரை) நன்னீரை - மென்மையால் நீ எல்லா மலர்களினும் நல்ல இயற்கையையுடையை. அனிச்சம் - மென்மையான ஒரு மலர் விசேடம். வீழ்பவள் - விரும்பப்பட்டவள். வள்ளியம்மையார் அனிச்சமலரினும் மெல்லியர் என்பது கருத்து. 6

காதற் சிறப்புரைத்தல்

166 நாதர் பரமகுரு நாதர் குறமகள்பாற்
காதன் மிகுதிசொலக் கண்டோமே—தீயசெழும்
பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

(கு - ரை) நாதர்-சிவபெருமானுக்கு. பரமகுருநாதர்: முருகக்கடவுள். 'தீய செழும் பாலொடு......நீர் என்று குறமகள்பாற் காதன் மிகுதிசொலக் கண்டோமே' என்று கூட்டுக; என்று என்பது இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. 7

நாணுத்துற வுரைத்தல்

167 ஆதியருள் சேய்நா ணகன்றுமட மான்மகட்குத்
தோழி யெதிர்நின்று சொல்லியது கூறிய
காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

(கு - ரை) அருமையராய பெண்களுடன் காமம் அனுபவித்துப் பிறகு அது பெறாது வருந்தும் ஆடவர்க்கு மடலேறுதல் அல்லது வலிமை இல்லை என்று கூறும் முகத்தால் தாம் மடலேறுவதாக முருகர் குறிப்பித்தார் என்று கொள்க. 8

அலரறி வுறுத்தல்

168 பரனருள்சேய் கேட்கப் பசும்பொன்மா னீன்ற
குறமகட்குத் தோழிநின்று கூறும்—திறனுவலின்

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

(கு - ரை) கேட்க - சிறைப்புறத்தாராக இருந்து கேட்க. சேய் கேட்டலின் பயன் வரைந்துகொள்ள முயலுதலாம். 9

## கற்பியல்

### பிரிவாற்றுமை

169 சூளுறவு செய்திறைவர் தோழர் பிரிவறிந்த
கோல்வளையார் கூறுவது தோழிக்குச்—சால
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு.

(கு-ரை) சூளுறவு-பிரியேன் என்று முன்பு செய்துகொடுத்த சத்தியம். இறைவர் தோழர் - சுந்தரர். கோல்வளையார்-திரட்சியான வளையலை அணிந்த சங்கிலியார். ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் சங்கிலியாரை மணந்து பிரிந்தது முன் சில கவிகளால் விளங்கும். 10

### படர்மெலிந்திரங்கல்

170 அரன்றனக்குத் தோழனெனு மாரூரன் சேணிற்
பிரிந்த வழிபரவை பேசும்—இரங்கி
மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல்ல தில்லை துணை.

(கு - ரை) 'உலகத்திலே உள்ள உயிர்களையெல்லாம் தானே துயிலப் பண்ணுதலால் இராப்பொழுதுக்கு நானன்றி வேறு துணை இல்லை. அதனால் அந்த இராப்பொழுது இரங்கத்தக்கது' என்று பரவையார் இரங்கிக் கூறும் என்க. 11

### கண் விதுப்பழிதல்

171 நந்தியருள் சேர்பரவை நம்பியைக்கா ணக்கிடையா
வெந்துயரா லாற்றுவித்த மெல்லிழைக்கு—வந்துசொல்ல

கண்தாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

(கு - ரை) நந்தி - சிவபெருமான். நம்பி - சுந்தரமூர்த்தி நாயனுர். காதலரைக் காட்டச்சொல்லி எம் கண்கள் இன்று அழுவது என் கருதி! இத்தணியாத நோயை யாம் அறிந்தது அக் கண்கள் முன்பு எம் காதலரைக் காட்டலால் அன்றோ! சொலல் : எழுவாய். 'கண்டாங்......கண்டது' என்பது பயனின்று. 12

பசப்புறுபருவரல்

172 பரனன்பர் நீங்கப் பரவைதனை யாற்றும்
புரிகுழற் பாங்கி புகலும்—பெரிதும்
பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

(கு-ரை) உலகம் இவளைப் பழிக்குமேயன்றி இவள் இங்ஙனம் ஆயினமைக்கு எவர் காரணமாவர் என்பாரில்லை என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. 13

தனிப்படர் மிகுதி

173 கண்ணுதலார் தோழன் கருத்தையறிந் தாற்றிஞய்
என்னப் பரவை யிகுளைக்குப்—பன்னுவது
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

(கு - ரை) தோழன் - சுந்தரமூர்த்திகள். என்ன - என்று தோழி கூற. அவரும் என்னிடம் காதல் கொள்ளாராயின் என்னுல் காதல் செய்யப்பெற்ற அவர் எனக்கு என்ன இன்பத்தைச் செய்தல் கூடும். 14

நினைந்தவர் புலம்பல்

174 நம்பி தனைநினைந்து நம்பரருள் சேர்பரவை
துன்பமுற்றுத் தோழிக்குச் சொல்லியது—சென்றிருந்து
தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணுர்கொல்
எம்நெஞ்சத் தோவா வரல்.

(கு-ரை) கடிகொண்டார் - காவல்கொண்ட காதலர். ஓவா - ஒழியாமல். தலைவர் என்னை விடாமல் என் நெஞ்சத்தே வருகின்றார். அதற்கு நாணூர்போலும் என்பது கருத்து. 15

கனவு நிலை யுரைத்தல்

175 தம்பிரான் றேழூர் தமையிகழ்ந்த தோழிக்கு
மங்கை பரவை மறுத்துரைக்கும்—எங்கிருந்தும்
துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து.

(கு - ரை) துஞ்சுங்கால் தோண்மேலராகி என்றது கனவின் கண் அவர் தோன்றி இன்பம் நல்கியதைக் குறிக்கும். 'ஒரு காலும் நான் அவரை மறந்தறியேன்' என்பதை உட்கொண்டு, 'விழிக்குங்கால் நெஞ்சத்தர்' என்று பரவையார் கூறினார். 16

பொழுதுகண்டிரங்கல்

176 ஆற்றுவித்த தோழிக் கரனன்ப ரைப்பிரிந்த
கோற்றொடியா ரூர்மடந்தை கூறுவது—மேற்சென்று
காலைக்குச் செய்நன்றென் கொலெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

(கு - ரை) முன்கூடிய காலத்தில் தலைவர் 'மறுநாள் பிரிவேன்' என்றாராக, அவர் பிரிந்து செல்கைக்குக் காரணமாயிருந்த காலைநேரம் தலைவிக்குத் துன்பம் இழைத்துவந்தது. தலைவர் பிரிந்திருக்கும் சமயம் இரவில் அவள்படும் துன்பங்கண்டு அத் துன்பை ஒழிக்கவந்ததாதலின் காலையை இங்கே இன்பஞ் செய்வதாகக் கூறினாள். கூடினாருக்கு இன்பஞ் செய்யும் மாலை கணவனைப் பிரிந்த மக்களுக்குத் துன்பஞ் செய்தலின், 'யான் மாலைக்குச் செய்த பகை எவன்கொல்' என்றார். 17

உறுப்பு நலனழிதல்

177 அரனன்பர் நீங்குதலு மாற்றாமை கண்டு
பரவைக்குத் தோழி பகரும் தலைவர்

தணந்தமை சால வறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.

(கு - ரை) வீங்கிய தோள் - பூரித்து நின்ற தோள்கள். தணந்தமையால் இன்று தோள் மெலிந்தன என்றுகொள்க. 18

நெஞ்சொடு கிளத்தல்

178 அரனருள்சேர் நம்பிபிரி வாற்றுமை லாரூர்ப்
பரவைதனி நின்று பதைத்துக்—கருதும்
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

(கு - ரை) ஆற்றுமை மீதூரத் தன் துக்கத்தைக் கேட்டார் பிறரின்மையின் தலைவி நெஞ்சொடு கூறுகிறுள். கூறுவதால் துக்கம் குறையும் என்பர். எவ்வநோய் - ஒன்றானும் தீராத நோய். 19

நிறையழிதல்

179 வேடர்க் கருளும் விமலர் துணைபிரிவு
நீடப் பரவை நிறையழிந்து கூறியது
காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

(கு - ரை) வேடர்க்கு - கண்ணப்ப நாயனுர் முதலிய பல வேடர்களுக்கு. விமலர் துணை - தம்பிரான் தோழரென்னும் சுந்தரமூர்த்தி நாயனுர்; 181. 20

அவர்வயின் விதும்பல்

180 இறைவரருள் பேர்பரவை யேந்தல்பிரி வாற்றிப்
பகருமிகு ளைக்குப் பகரும் எதிர்நின்று
காண்கமன் கொண்கனைக் கண்ணுரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு.

(கு - ரை) ஏந்தல்-ஆண்களிற் சிறந்தவர். எதிர்நின்று பகரும் எனக் கூட்டுக. 21

குறிப்பறிவுறுத்தல்

181 இறைவர்துணை நீங்கி யெழிற்பரவை யோடும்
உறையுநாட் பாங்கிக் குணர்த்தும்—செறியும்
மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு.

(கு-ரை) அணி - புணர்ச்சியினால் தோன்றிய அழகு. தலைவி யினது குறிப்பினைத் தலைவன் தோழிக்கு உணர்த்தியது இது. 22

புணர்ச்சி விதும்பல்

182 ஈசனன்ப ரோடு மியைந்த பரவைதனைப்
பேசியதோ ழிக்கவளும் பேசியது கூறின்
எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

(கு - ரை) கோல் - கோலின் கருமை நிறம்; ஆகுபெயர். சித்திரம் எழுதும்போது, முன்பெல்லாம் புலனாகியிருந்த அதன் கருமை நிறம் தோன்றுதவாறு பிரிந்திருந்த வழி தலைவர்மேல் பிழைகண்டிருந்த நான் அவர் கூடிய வழி இன்று அப்பிழையைக் காணேன். 23

நெஞ்சோடு புலத்தல்

183 தம்பிரான் றோழர் தவறுகண்டுங் கூடுவதற்
கன்பு செயும்பரவை யார்மொழிவார்—என்றும்
அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

(கு - ரை) தவறு-திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்த தவறு. நெஞ்சே, நீ எமக்கு ஆகாதது எவன்? எவன் - என்? 24

புலவி

184 அரன்வாயி லாகச்சென் றூரரோடு
பரவையா ரூடலுணர் பண்பின்—உரைசெய்யும்
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.

(கு - ரை) வாயில்-தலைவன் தலைவிகளைக் கூட்டுதற்கு ஏற்ற தோழி முதலியவர்கள் (நாற் - நம்பி. அகத். சூ. 67.) 'ஊடலாவது தலைவன் தலைவியருள் ஒருவரை ஒருவர் நணுகாராகி உரை மறுத்திருத்தல்' (ஷெ. சூ. 204, உரை.) 25

புலவி நுணுக்கம்

185 எல்லாரு முய்வதற்கா வீசனுலாப் போதுதலும்
புல்லா துமையாள் புலந்தளவிற்—சொல்லாடும்
பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

(கு - ரை) ஈசன் உலாப் போதலும். அப்பொழுது அவரைப் பரமாதர் விரும்பினர் என்று உமாதேவியார் ஊடிக் கதவடைத்துக் கொள்ளுதலும் ஒரு திருவிழாவாக மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருநாளில் இன்றும் நடைபெறுகிறது. 26

ஊடலுவகை

186 தண்டி யுணர்த்தத் தலைவி புலவிதீர்த்
தண்டிப் பெருமா னணைந்தளவிற்—கண்டருளும்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

(கு - ரை) தண்டி - சண்டேசுவர நாயனார். இங்கே வாயிலாக இவர் கூறப் பெற்றுள்ளார்.

திருவள்ளுவப் பயனாகிய திருக்குறள்மேல் வைத்துக் கூறப்பட்டவை இவ்வளவோடு முற்றும். 27

கற்பியல் முற்றும்
காமத்துப்பால் முற்றும்

## 4. வீட்டின்பால்

இந்நூலாசிரியர் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால்களுக்குத் திருக்குறளை ஆதாரமாகக் கொண்டாற்போல் வீட்

டின் பாலைக் கூறுவதற்குத் திருவருட் பயன் என்னும் நூலை ஆதார மாகக் கொண்டுள்ளார். இது சித்தாந்த சாத்திரம் பதினான் கனுள் ஒன்று. கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியரென்பார் இதனை அருளிச் செய்தவர். இது பத்ததிகாரங்களை நூறு குறட் பாக்களாற் கூறுவது. திருவள்ளுவப் பயனுக்கும் திருவருட் பயனுக்குமுள்ள ஒருமைப் பாட்டைப் பின்வரும் மேற்கோளால் உணரலாம்.

"அறம் பொருள் இன்பம் வீடென்னும் நால்வகைப் பொருளையும் மூவகைப் படுத்தி ஓதும் வேதப் பொருள் விளக்க மும் தமிழ் வேதமுமாகிய திருவள்ளுவப் பயனென்னும் திருக் குறள் அதன் முதனூல் வேதமே போன்று வீட்டுநெறியினை விளங்கக் கூருது மயங்கக் கூறுதலான், அம்முதனூலாகிய வேதப் பொருளை விளக்கி வீட்டு நெறியினைக் கூறும் ஆகமமே போன்று, திருக்குறளை விளக்கி வீட்டுநெறி கூறுவது இத்திருவருட் பயன் என்பதுஉம் ஆம் என்க.

"வேதமே திருக்குறள் என்பதற்கு அசரீரி, சரசுவதி, இறை யனார், உக்கிரப் பெருவழுதி முதலிய சங்கப் புலவர் நாற்பத் தொன்பதின்மர் கூறிய திருவள்ளுவ மாலையானும், 'தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்......ஒரு வாசக மென்றுணர்' என்னும் ஔவையாரின் பாசுரத்தானும் துணிக.

"ஆகமமே திருவருட் பயன் என்பதற்குச் சிவஞான போத முதலிய சித்தாந்த நூல்களோடு சேர்க்கப்பட் டிருப்பதானும், சிவஞானபோதம் போன்று பதிபசுபாசத் திறங்களையே கூறுத லானும், பௌஷ்கராதிகளைப் போன்று விந்துசக்தி லட்சண மாகிய திருவருட் டிறத்தையே தெள்ளிதிற் றெளிய விதந்தெடுத் தோதுதலானும் என்க.

"இனித் திருக்குறளின் பொருளை விளக்குவ தெங்ஙன மெனின், திருக்குறளின் முதற் செய்யுளாகிய 'அகர முதல' என்னும் செய்யுளையே திருவருட் பயனின் தலைச் செய்யுளாகிய 'அகர வுயிர்போல்' என்னும் செய்யுள் விரிந்தெடுத் தோது வதை வல்லோர்பால் கேட்டுணர்க."—திருவருட் பயன் முகவுரை.

## பதிமுது நிலை

187 வள்ளுவருந் தாமு மதித்தபொரு ளொன்றென்றே
தெள்ளு தமிழ்விரகாய்ச் செப்பியது—சொல்லின்
அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

(கு - ரை) பதிமுது நிலையாவது மேலாகிய இறைவனது இயல்; ப[illegible]

தாம் - கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர்; வள்ளுவரும் தாமும் மதித்த பொருள் ஒன்றே: தலைப்பிலே காட்டியுள்ள உரைநடைப் பகுதியை நோக்குக. அகரம் இறைவர்க் குவமை: 1, குறிப்புரை. அறிவாகி என்றதனால் சடமாகிய ஒலிவடிவன்று என்பது பெற்றும். அகரம்போல இறையும் ஒருகாற் புணர்ந்து நீங்காமையின் 'நிறைந்து' என்றும், எல்லாப் பொருள்களும் உட்படுதற்கு 'எங்கும்' என்றும், பலர்க்கும் விளங்கும்பொருட்டு அகரத்தை உவமை கூறினும் பிறிதோருவமை தனக்கில்லான் இறைவன் என்பது தோன்ற 'நிகரில்' என்றும் கூறினார். இறைவனது உண்மையும் அவன் வேறற எல்லா உயிர்களிலும் நின்றமையும் இதனாற் கூறப்பட்டன. 1

## [1] உயிரவை நிலை

188 பொன்னர்பிறர் காணாரப் புண்ணியனைப் புண்ணியனும்
அன்னவர்முற் றோன்றல ராதலினால்-சொன்னதுகேள்
ஊமன்கண் போல வொளியும் மிகவிருளே
யாமன்கண் காணா தவை.

(கு - ரை) உயிர் - பசு. உயிரவை என்று பன்மையாற் குறித்தமையின் முன்னதிகாரத்திற் கூறப்பெற்ற பதி ஒன்றே என்பது பெறப்பட்டது. பதியின் இயல்பைக் கூறி அதனையடுத்துப் பசுக்களின் இயல்பைக் கூறுதலான் மேலையதிகாரத்தோடு இதற்குள்ள தொடர்பு விளங்கும்.

பொன்னர் - இலக்குமியை யுடைய திருமால். ஊமன் - கோட்டான். ஒளி - பகலவன் ஒளி. இருள் - ஆணவமலம்.

(பி - ம்) 1 'பசு நிலை'

மன் - நிலைபேறு. இங்கே அந்நிலை பேற்றை யுடைய சிவஞானத்தைக் குறிக்கும். சூரியன் ஒளியைக் காணாத கூகையின் கண்களுக்கு உயிர்களும், சூரிய ஒளிக்குச் சிவஞானமும் உவமை. ஒளியும்; உம், சிறப்பும்மை. இருளேயாம் : ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது.

உயிர்கள் பதியைக்காண அருள்பெறுவது எக்காலமென இரங்கிக் கூறியது இது. 2

[1] இருள் மல நிலை

189 அருண கிரியறியா ரண்ணலெனத் தத்தம்
கருவி யுபகரிக்கக் கண்டும்—இருவர்க்கும்
அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடை[2]யடங்கி
இன்றளவு நின்ற திருள்.

(கு - ரை) இருண்மல நிலையாவது அறியாமையே வடிவாகிய ஆணவமலத்தினது தன்மை; இதனைப் பாசம் என்பர். ஆணவ மலத்தோடு ஒழிந்த மாயை கன்மங்களும் உப லட்சணத்தால் அடங்கும். முன்னதிகாரத்திற் கூறப்பட்ட உயிர்களாகக் கட்டுப் படுத்தும் பாசநிலையைக் கூறுதலான் மேலையதிகாரத்தோடு இதற்குள்ள தொடர்பை உணர்க.

அருணகிரி - திருவண்ணாமலையை. திருமாலும் நான்முகனும் தம்மைத்தேடி ஆராயும்பொருட்டுச் சிவபெருமான் அழற்பிழம்பாய் நின்ற மலை இது. அறியார் - மாலும் அயனும். அண்ணலென - தலைவரென்று. கருவி உபகரிக்க - தத்தம் முயற்சிவழிகளை நாட. இருவர்க்கும் - அந்த அயன் அரிகளாம் இருவருக்கும். அன்று அளவி - அறுதியே பொருந்தி. உள்ஒளி - சிவஞானம். ஆவியிடை உள்ளொளியோடு உள்ளடங்கியென்றது சிவஞானத்தை மறைத்து என்றபடி. இருள் - ஆணவமாம் இருள்; எழுவாய். இன்றளவும் நின்றது என்றது இனி இறையருள் உண்டாகி அது நீங்கப்பெறினும் பெறுவர் என்பது புலப்படுத்தற்கு. ஆணவம் அறுதி என்பது இதனாற் புலப்படுகிறது. 3

(பி - ம்.) 1. 'பாசநிலை' 2. 'ஒடுங்கி'

அருளது நிலை

190 இறைவ னெதிர்ப்பட்டு மிவரருள்வேண் டாமற்
பிறவசுர மெல்லாம் பெறுதல்—அறையிற்
பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேல் பூனை
கரப்பருந்த நாடுங் கடன்.

(கு - ரை) அருள் - ஞானம், இருண்மலமாகிய அவிச்சையைத் துறந்து வீட்டுநெறி காட்டுதற்பொருட்டு அதற்கு மாறாகிய அருளது முறைமை கூறுதலான் மேலையதிகாரத்தோடு இதற்கு இயைபுண்மை யறிக.

பிற - பிறவரங்களை. பிறபெறுதல் எனக் கூட்டுக. பரப்பமைந்த - விசாலமான அருட் பொருளை. கேண்மின் (இந்திரிய மனங்களைப் பிறவிடத்தில் விடாமல்) - கேளுங்கள். அங்ஙனம் அருட்பொருளைச்சேராது மித்தையாகிய உலக இன்பங்களை நாடுவது பாலை வைத்த கலத்தின்மேல் இருக்கும் பூனை அதனைப் பருகாது அருகே வந்த ஒரு கரப்பானைப் பிடித்துத் தின்ன நாடிய தன்மையை ஒக்கும். பாற்கலன் - பாற்பாத்திரம்; உறியின்மேல் வைத்த பாற்பாத்திரம் என்று கூறுவாருமுண்டு. நாடும் என்றது கரப்பான் பூச்சி பூனைக்கு அகப்படாமற் போதலையும் குறிக்கும்.

ஞானத்தின்மேல் உயிர்கள் பற்றுச் செய்யாமையை இது உணர்த்திற்று. 4

அருளுருநிலை

191 வாதவூரர்க் காள்போல வந்த பரசிவனை
யாரவனென் றெண்ணி யறிந்தார்கொல் - பேரருளாற்
பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் [1]காணார் புவி.

(கு - ரை) அருளுரு - ஞானத்தின் வடிவாகிய குரவன்; ஞானகுரு. அருளினது நிலைகூறி அதன்படி விளைவிய குரவனது நிலை கூறுதலின் மேலையதிகாரத்தினோடு இதற்குள்ள இயைபு புலனாகும்.

(பி - ம்.) 1. 'காணா'

வாதவூரர் - மாணிக்கவாசகர். ஆள - குதிரைகளை ஓட்டிக் கொண்டுவந்த ஆள். அறிந்தார்கொல் என்பதற்குப் பாண்டியன் முதலானோர் என்ற எழுவாயைத் தந்துரைக்க. பார்வை—பார்வை மிருகம். காட்டில் ஏதேனும் ஒரு விலங்கைப் பிடிக்க வேடர் அவ்வின விலங்கை வீட்டில் வளர்ப்பார். இது பார்வை எனப் படும் : திருவிளை. 58 : 46. மாக்களை - ஆன்மாக்களை. புவி - உலகத்திலுள்ள மக்கள் ; எழுவாய். போர்வையென - தம்மை இரட்சிக்க வந்த திருமேனி என்று.

ஞானகுரு வடிவினை என்ற தொடர் அதிகாரத்தாற் பெறப் பட்டது. 5

## அறியும் நெறி

192 நீற்றறையின் மற்றிடத்து நின்றிறைவ னன்பருக்குத்
தோற்றுவதின் றித்துணையாய்த் துன்பமுறு—தாற்றுதலால்
[1]ஊனுயிரால் வாழு மொருமைத்தே ஊனொடுயிர்
தானுணர்வோ டொன்றுந் தரம்.

(கு - ரை) அறியும் நெறியாவது உணரும் முறைமை. உணர்வது உண்மைப் பொருளை என்க. அருளுருவைக் கொண்டே உண்மைப் பொருளை அறியவேண்டி யிருத்தலின் மேலை யதிகாரத் தோடு இதற்குள்ள தொடர்பு விளங்கும்.

நீற்றறையின் - பல்லவன் இட்ட நீற்றறையில். மற்றிடத்து —யானை இடறவிட்ட விடத்தும், தம்மோடு கல்லைச் சேர்த்துப் பிணைத்துப் போகட்ட கடலினிடத்தும். அன்பர் - வாகீசர். தோற்றுவதின்றி - கண்ணுக்குப் புலனாகாதிருந்தும். துணையாய் - உடலோடு கூடி ஒன்றியிருந்து காவலாக.

திருநாவுக்கரசர் சூலைநோய் தம்மை யடுத்ததென்றும் அது சமணரால் தீர்க்கமுடியாமற் போயிற்றென்றும் பொய்க் காரணங்கள் காட்டிச் சமணத்தைவிட்டு நீங்கிச் சைவத்திற் புகுந்தாரென்று சமணர்கள் தங்கள் இறைவரிடம் கூறப் பல்லவ வேந்தன் வாகீசப் பெருந்தகையாரை அழைப்பித்துப் பலவிதங்களில்

1. 'ஊனுயிரில்'

தண்டித்தான். எம்பெருமான் அருளால் வாகீசர் அக்கொடிய தண்டனைகளை யெல்லாம் இன்பமாகப் பெற்று மீண்டும் வந்தார் என்பது வரலாறு.

ஊன் - உடல்; ஆகுபெயர். ஊனொடுயிர் - உடலிலுள்ள ஆன்மா; உருபுமயக்கம். உணர்வொடு - திருவருளினால்; ஒடு உருபு மயங்கி வந்தது. ஆன்மா திருவருளினாலே சீவிப்பது, உடல் உயிரால் நிலைபெறுவதுபோலும். 6

* உயிர் விளக்கம்

193 துறைபிழைத்துச் சென்று சுமந்தாலு மீசன்
உணர்வோடொன் றுகுந் தரம்பார் தரையில்
இடைக்கத் [1]தகுமேநற் கேண்மையார்க் [2]கெல்லாம்
எடுத்துச் சுமப்பானை யின்று.

(கு - ரை) உயிர்விளக்கமாவது ஆன்மாவை விளக்கப்படுத்துதல். அறிந்தபடி நின்று யான் எனதென்னும் செறுக்கறுத்தலே உயிர் விளக்கமாம். இதனை ஆன்மசுத்தி என்பர். உண்மைப் பொருளை அறிவதற்கு ஆன்மசுத்தி இன்றியமையாததாதலின் மேலை யதிகாரத்தோடு இதற்குள்ள தொடர்பை உணர்க.

துறைபிழைத்து - தாம் பிறந்த சைவ நெறியைவிட்டு நீங்கி; நீங்கிச் சென்றது சமண நெறிக்கு; சென்றவர் **அப்பர் சுவாமிகள்.** அல்வழியில் நிலவிவந்த வாழ்க்கையாதல்பற்றி, 'சுமந்தாலும்' என்றார்.

ஈசன் உணர்வோடு ஒன்றுனது திருவதிகை வந்து சைவத்திற் புகுந்தபோது, அவ்வுணர்வோடு ஒன்றியிருந்தமை சைவத்தை மீட்டும் தந்ததென்க.

கேண்மையார் - நல்ல கேள்வி ஞானத்தையுடைய பெரியார். அருளோடு கூடிய கேள்வியை, 'நற்கேண்மை' என்றார். எடுத்துச்சுமப்பான் - எல்லாருடைய பாரத்தையும் தமதாகக்கொண்டு சுமக்கும் சிவபெருமான். அருளாகும் கேள்வியுடையாருக்குப் பதி எளிதாகப் புலப்படும் என்பது கருத்து. 7

(பி-ம்.) * உயிரவை விளக்கம் 1. 'தகுமோ' 2. 'கல்லால்.

### இன்புறு நிலை

194 வாதவூ ரன்பிறர்போல் வந்தவரா னந்தமுறும்
போதினிய தாகப் புணருமறை—ஆதலினால்
இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம்
[1]இன்பகன மாதலினா லில்.

(கு - ரை) இன்புறு நிலையாவது ஆன்ம லாபம் அடையும் முறை. ஆன்மசுத்தியாகிய உயிர்விளக்கங் கூறி அதன்பின் இதனைக் கூறவே மேலதிகாரத்தோடு இதற்குள்ள தொடர்பு விளங்கும்.

பிறர்போல் வந்தவர் - திருப்பெருந்துறையிற் பரமாசாரியராக வந்த சிவபெருமான். மறை - மறைப்பொருள். எய்துவார்க்கு - பெற விரும்புவாருக்கு. ஈயும் அவர் - சிவபெருமான். உருவம் - வடிவம். இன்ப கனம் - பேரின்பம்; ஆனந்தமயம். இல் - தாம் அதனை நுகர்வதில்லை.

வாதவூரர் அறுதியே ஆணவ மலத்தால் மறைப்புண்டு, குருந்த மரத்தடியில் எழுந்தருளிய பரமாசாரியரால் அது நீங்கப் பெற்றபோது இன்பம் புதிதாக வந்ததுபோலக் கருதினர் என்பது முதலிரண்டடிகளின் கருத்து. 8

### ஐந்தெழுத்தருள் நிலை

195 உண்டிலையென் றுகாமங்க ளோதிமத பேதத்தால்
கொண்டநெறி யுங்கதியுங் கூறுவதென்—அண்டர்பிரான்
எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(கு - ரை) ஐந்தெழுத் தருள்நிலையாவது ஐவகைப்பட்ட பஞ்சாட்சரமாகிய அருளினது நிலை. வீட்டுநெறி காட்டுதலால் திருவைந்தெழுத்தையும் திருவருளாகக் காட்டி யருளினர். சமாதியினை யடைவார்க்கே இன்புறுநிலை கூடும். அச்சமாதியினை அடைதல் கூடாதார்க்கு விதிப்படி ஐந்தெழுத்தை ஓதவே அங்

(பி - ம்) 1. ‘இன்பதன’

நிலை கூடும். இன்புறு நிலையை யடுத்து இவ்வதிகாரத்தைக் கூறியிருக்கிற முறை இதனால் விளங்கும்.

'ஆகமங்கள் உண்டு இல்லை என்று மதபேதத்தாற் கொண்ட நெறியும் கதியும் ஓதிக் கூறுவது என்' என்று கூட்டுக. அண்டர் பிரான் எல்லாவகையும் இயம்பும். இவன் - ஆன்மா. அகன்று நில்லா வகையை - சிவசக்தியைவிட்டு நீங்காத முறைமையை.

இன்புறு நிலையை அடைதற்குப் பல்வகைப்பட்ட உபாயங் களை அண்டர்பிரான் கூறியிருப்பது இன்னதற்கென்பதை இக் கவி உணர்த்திற்று. அறியும்நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை இம்மூன்றன் கருத்தும் இதனுள் தொனிக்கின்றது. 9

[1] அடைந்தோர் தன்மை

196 சிதம்பரஞ் சிந்தித்தார் சிவலோக மன்றி
விதந்தறியா ரொன்றும் விரும்பிப் பயந்தவிர
எல்லா மறியு மறிவுறி னுமீங்கிவரொன்
[2]றல்லா லறியா ரற.

(கு - ரை) மேலை யிரண்டதிகாரங்களிற் சமாதி நிலைமை கூறி அதனை யடைந்தோர் தன்மையை இங்கே கூறுதலான் அதிகார முறைமை விளங்கும், அடைந்தோர் - ஞாதாக்கள்; சீவன் முத்தர்கள்.

சிற்சபையைச் சிந்தித்த பரமஞானிகள் அச்சம் நீங்கச் சிவலோகமன்றி வேறொன்றையும் மேற்பட்டு அறிய மாட் டார்கள். இவர்கள் சீவன் முத்தர்கள். எல்லாம் அறியும் அறிவு-சர்வஞ்ஞத்துவம். ஒன்று - ஆனந்த ஞானம் ஒன்றே; ஏகாரம் விகாரத்தால் தொக்கது. அற அறியார் - மற்றொன்றினையும் பொருந்தி அறிய மாட்டார்கள்.

சீவன்முத்தர் எவ்விடத்தும் சிவமே கண்டிருப்பர் என்பது கருத்து. 10

**வீட்டின்பால் முற்றும்**
**முதுமொழிமேல்வைப்பு முற்றும்**

---

(பி - ம்.) 1. 'அணைந்தோர்' 2. 'றல்லா தறியா'

உ

செந்திலாண்டவன் துணை

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[ எண்—செய்யுளெண் ]

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[ எண்–செய்யுளெண் ]

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 13 | 7 | லுளகாள | லுலகாள |
| 16 | 5 | சிவமயஞ் | சிவசமயஞ் |
| 25 | 30 | வராணுல் | வாணுல் |
| 30 | 9 | மனுபவிப்பர் | மனுபவிப்பார் |
| 35 | 3 | யாற்பால் | யார்பால் |
| 39 | 12 | னுறுப்படையான் | னுறுபடையான் |
| 45 | 12 | லூரிலிலுள்ள | லூரிலுள்ள |
| 50 | 28 | அறத்துறை | அரத்துறை |
| 57 | 22 | பரவை | சங்கிலி |
| 66 | 1 | மிகுநலம் | மிகநலம் |
| 67 | 4 | மொருவர்க்குத் | மொருவற்குத் |
| ,, | 21 | மூவலிங்க | மூலலிங்க |

உ

செந்திலாண்டவன் துணை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து தலைவராக
எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத்தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொதுமக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் போறக் கட்டளைகள்.

| தொடர் எண் | தரும விவரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 1. | சிவஞானசித்தியார் உபந்யாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | ... 15,000 |
| 2. | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த | ... 11,500 |
| 3. | திருவாங்கூர் மகாராஜா தேவாரப்பரிசு, | ... 5,000 |
| 4. | சேரமான் பெருமாள் தேவாரப்பரிசு, கொச்சி | ... 5,000 |
| 5. | மூவர் தேவாரப் பரிசு ; சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள், ஆடுதுறை | ... 10,000 |
| 6. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க | ... 60,000 |
| 7. | அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சைவசித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க | ... 30,000 |
| 8. | திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ | ... 1,50,000 |
| 9. | இசைத் தமிழ்க் கல்விக்கு | ... 1,00,000 |
| 10. | திருப்பனந்தாளில் கால்நடை வைத்தியசாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் | ... 20,000 |
| 11. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னதானம் | ... 10,000 |

| | | |
|---|---|---|
| 12. | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் | ... 10,000 |
| 13. | திருநள்ளாற்றில் ஆவணி மூல அன்னதானம் | ... 1,000 |
| 14. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் | ... 17,000 |
| 15. | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கள் உணவு நிதி | ... 1,00,000 |
| 16. | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப் பெறுமானம் | ... 66,000 |
| 17. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் | ... 2,900 |
| 18. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் | ... 3,300 |
| 19. | கும்பகோணத்தில் மணிக்கூண்டு | ... 25,000 |
| 20. | தஞ்சையில் காச நோய் வைத்தியசாலை | ... 28,500 |
| 21. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் | ... 9,000 |
| 22. | மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு | ... 5,000 |
| 23. | தருமை ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் | ... 5,000 |
| 24. | சென்னை விவேகாநந்தா கல்லூரியில் ராஜாஜி சைவ சித்தாந்தக் கட்டளை | ... 10,000 |
| 25. | ஸ்ரீ காசிப் பல்கலைக்கழகத்தில் சர். எஸ். ராதா கிருஷ்ணன் சைவ சித்தாந்தக் கட்டளை | ... 20,000 |
| 26. | ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் | ... 5,000 |
| 27. | மதுரைத் திருமலை நாயக்கர் தேவாரப் பரிசு | ... 10,000 |
| 28. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகட்கு | ...1,00,000 |

| | | |
|---|---|---|
| 29. | ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் ... | 5,000 |
| 30. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்—ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு ... | 1,50,000 |
| 31. | டாக்டர் சாமிநாத ஐயர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை ... | 3,500 |
| 32. | குடந்தையில் காந்தியடிகள் பசுப்பரிசு ... | 1,000 |
| 33. | காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகாரநிதி ... | 3,000 |
| 34. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை ... | 10,000 |
| 35. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... | 4,000 |
| 36. | விஷ்ணுபுரத்தில் ஹைஸ்கூல் படிப்பக நிதி ... | 1,000 |
| 37. | குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 38. | திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 39. | திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப்பந்தல் தர்மம் ... | 3,500 |
| 40. | ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ... | 3,500 |
| 41. | சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவுநிதி ... | 35,000 |
| 42. | சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ... | 12,000 |
| 43. | இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் ... | 3,500 |
| 44. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ... | 17,825 |
| 45. | பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ... | 5,000 |

46. அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி ... 3,500

47. ஸ்ரீகாசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீகுமார
சாமி அன்னதானம் ... 5,000

48. ஸ்ரீவில்லிபுத்தூரில் தேவாரப் பரிசு ... 3,500

49. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி
கோயிலில் மின்சார தீபம் போட ... 7,500

50. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ... 5,000

51. திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள்
நினைவு அன்னதானம் ... 7,000

52. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்
ஸ்ரீவைகுண்டம் உதவி நிதி ... 18,500

53. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்
ஸ்ரீகாசிப் பல்கலைக் கழகத்திற்கு நான்கு
ஆண்டு மூலதனம் ... 28,000

54. 28-வது ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம்
திருச்செந்தூர் உதவி மூலதனம் ... 15,500

55. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள்
படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும்
நிலமும் .. 15,000

56. மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி,
அலகபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார்
முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்
தாந்த உபன்னியாசக் கட்டளை ... 5,000

57. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்—சிதம்
பரம், மதுரை, திருச்செந்தூர் ... 60,000

58. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில்
சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ ... 2,275

59. ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப்
பள்ளி நிறுவ ... 4,5000

60. ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசி
யாத்திரை நிதி ... 5,000

61. பனைசக் கல்லூரியில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ... 5,000

62. (6) ஸ்ரீகாசிப் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது ... 16,000

63. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்-மதுரை முதலாண்டு உதவி மூலதனம் ... 7,000

64. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரயம் ... 14,000

65. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் வகையரு - திருநெல்வேலி முதலாண்டு உதவி மூலதனம் ... 5,000

66. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி வகையரு - கும்பகோணம் முதலாண்டு உதவி மூலதனம் ... 7,000

67. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடை ... 10,000

68. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ... 27,975

69. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளம் அளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் ... 10,000

70. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ... 3,000

71. ஸ்ரீ காசியில் இந்தியக் குடியரசு தின அன்ன தானம் ... 10,000

| | | |
|---|---|---|
| 72. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி | 1,50,000 |
| 73. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப் பெறுமானம் ... | 50,000 |
| 74. | சண்டேசுவர நாயனூர் நினைவு தண்ணீர்ப்பந்தல் தருமம் திருவாப்பாடி ... | 3,500 |
| 75. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ... | 7,000 |
| 76. | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் தேவாரப் பரிசு நிதி ... | 5,000 |
| 77. | சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு திருக்குறள் பதிப்பு நிதி ... | 35,000 |
| 78. | ஸ்ரீ வைகுண்டத்தில் மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு நிதி ... | 3,500 |
| 79. | கும்பகோணம் தாலூகா மேலச் சூரியமூலை கண்டியன் பழவாற்றின்மீது பாலம் கட்ட... | 7,470 |
| 80. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப்பந்தல் தரும நிதி ... | 3,500 |
| 81. | பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் ... | 5,000 |
| 82. | திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் ... | 7,000 |
| 83. | திருவாஞ்சைக்களத்தில் ஸ்ரீ சேரமான் ஸ்ரீ சுந்தர மூர்த்தி நாயனூர் நினைவு வாசகசாலை நிறுவ ... | 5,000 |
| 84. | திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி ... | 35,000 |
| 85. | இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன்மார்க்க சங்க நூல் நிலைய நிதி ... | 5,000 |

86. லால்குடி ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி ... 15,000

87. அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி... 5,000

88. குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு ... 5,000

89. திருப்பூந்துருத்தியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... 15,000

90. திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு ... 5,000

91. ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞான சம்பந்தர் நினைவுப் பரிசு ஸ்ரீவைகுண்டம் ... 3,500

92. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம், இராமேசுவரம் ... 3,500

93. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்ன தானம், சென்னபுரி அன்னதான சமாஜம், சென்னை ... 5,000

94. காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்னதானம் ... 5,000

95. திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமி கள் நினைவு அன்னதானம் ... 5,000

96. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி ... 5,000

97. திருநாரையூரில் ஸ்ரீ குருஞானசம்பந்தசுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ ... 5,600

98. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு... 5,000

99. தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை ... 5,000

100. மணிக்குடியில் கடலூர்க்கலயர் புனற்பந்தர் நிதி 3,500

101. காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞானசம் பந்த சுவாமிகள் நினைவு அன்னதானம் ... 5,000

| | | |
|---|---|---|
| 102. | திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் திருவள்ளுவர் நினைவுப் பரிசு ... | 5,000 |
| 103. | ஸ்ரீ காசியில் கமலை ஞானப்பிரகாசர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 104. | திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி ... | 5,000 |
| 105. | காசியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி | 7,000 |
| 106. | ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி நிதி ... | 30,000 |
| 107. | செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி ... | 50,000 |
| 108. | திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி ... | 12,000 |
| 109. | ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதி நெறி விளக்கப் பரிசு - திருச்செந்தூர் - ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளிகளில் ... | 7,000 |
| 110. | ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு - கார்த்திகை ... | 7,000 |
| 111. | சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவு சிவபோகசாரம் பரிசு நிதி | 5,000 |
| 112. | தஞ்சையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு—சேம வைப்பு ... | 5,000 |
| 113. | மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு—சேம வைப்பு ... | 5,000 |
| 114. | திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தல் தருமநிதி தத்துவாச்சேரி ... | 3,500 |
| 115. | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |